# தாயுமானவர்





நுண்மாண் தமிழ்க்களஞ்சிய நூலறிஞர்

திருமுருக கிருபானந்தவாரியார் சுவாமிகள்

உ

முருகா

# தாயுமானவர்

(பேச்சு நடை)



நுண்மாண் தமிழ்க்களஞ்சிய நூலறிஞர்

திருமுருக கிருபானந்தவாரியார் சுவாமிகள்

அன்பளிப்பு :

தஞ்சாவூர்

நடராஜ பிள்ளை உலகநாதன் M.A.B.T

வெளியீடு




குகஸ்ரீ வாரியார் பதிப்பகம்

132 / 107, சிங்கண்ணா தெரு,
சிந்தாதிரிப்பேட்டை, சென்னை – 600 002.
தொலைபேசி : 2845 7666
www.variyarswamigal.com

## நூற்குறிப்பு

நூல் : தாயுமானவர்

ஆசிரியர் : திருமுருக கிருபானந்தவாரியார் சுவாமிகள்

உரிமை : பதிப்பகத்தாருக்கு

பதிப்பு : முதற்பதிப்பு 2010

தாள் : டி.என்.பி.எல். வெள்ளைத்தாள்

அளவு : கிரௌன் சைஸ் 1/8

எழுத்து : 10.5 புள்ளி

பக்கம் : 64

படிகள் : 3000

விலை : 20

பதிப்பகம் : குகஸ்ரீ வாரியார் பதிப்பகம்
132/107, சிங்கண்ண தெரு, சிந்தாதிரிப்பேட்டை,
சென்னை–2. போன் : 2845 7666

கணிப்பொறி அச்சு : ஸ்ரீ ஜெயம் கிராஃபிக்ஸ்
16/148, ஆற்காடு ரோடு, வளசரவாக்கம்
சென்னை – 600 087. செல் : 91766 20033

அச்சிட்டோர் : ஸ்ரீவாரி கார்ட்ஸ்
7(4/1), நாயர் வரதபிள்ளை தெரு,
ராயப்பேட்டை, சென்னை–14. போன் : 2848 0109

அன்பளிப்பு :
தஞ்சாவூர்
நடராஜ பிள்ளை உலகநாதன் M.A.B

# வாழ்த்து

நேரிசை வெண்பா

*மன்னு புகழ்குகஸ்ரீ வாரி பதிப்பகம்*
*பன்னுபல நூல்கள் பதிப்பித்து — மின்னுவடி*
*வேலன் திருவருளால் மேன்மேலும் ஓங்கியே*
*சாலவும் வாழ்க தழைத்து.*

# நான் கண்ட தாயுமானார்

*நந்தமதென்று எண்ணி நலிந்தவுடல் வேறாக்கி*
*வந்தபொருள் உன்னதல்ல என்றனது வல்லமையும்*
*உன்தனக்கன்று எல்லாம் நமதென்றே உட்புகுந்த*
*தந்தையும்நீ மற்றும்அரு ளாந்தாயு மானவனே.*

தாயுமானவரின் பெருமையைத் தாங்கிப் பிடிக்கும் இந்தப் பாடல் பழைய பிரதியில் வண்ணத்தின் இடையில் உள்ளது. பாடியவரின் பேர் பதிவாகவில்லை. சித்தாந்தக் கருத்தின் சிகரமாக விளங்கியவர் தவராஜ யோகியாகிய தாயுமானவர். வண்டமிழ் மொழிக்கு வளஞ் சேர்த்தது இவரது பாட்டு நடை. வள்ளற்பெருமானார் போன்றோர்க்கு வழி யமைத்துக் கொடுத்தது இவரது நடை என்பர்.

மங்கையர் மாட்டு மனது செல்லாத மார்க்கத்தை வேண்டும்போது இவ்விருவரின் பாட்டு நடையும் ஒரே படித்தாய் இருக்கும். தத்துவக் களஞ்சியமான தாயுமானவரின் வரலாற்றை வாரியார் சுவாமிகள் பேசியதை எழுத்தாக்கி இங்கே தருகிறேன்.

சுவாமிகளின் பேச்சுநடை ஒரு சுவை, எழுத்து நடை ஒரு சுவை. அரிசி மாவு ஒன்றாக இருப்பினும் அதனை இட்லியாக இடும்போடு ஒரு சுவை, தோசையாக சுடும்போது ஒரு சுவையாக இருக்கிறதல்லவா! வீட்டறம், துறவறம் இரண்டும் மேன்மையே என்று தாயுமானவர் கூறிய தைத் தம் தவ வாழ்க்கையில் கடைப்பிடித்து வீட்டறத்திலிருந்தே துற வறத்தை மேற்கொண்டவர் நம் சுவாமிகள் ஓட்டுக்குள் புளி உள் ளொடுங்கியிருப்பதைப்போல்.

என்றும் இருக்க உளங்கொண்டாய்
இன்பத் தமிழுக் கிலக்கியமாய்
இன்னும் இருத்தல் செய்கின்றாய்
இறவாத் தமிழோடு இருப்பாய்நீ
ஒன்று பொருள்அஃது இன்பமென
உணர்ந்தாய் தாயு மானவனே
நின்று பரத்து மாத்திரமோ
நில்லா இகத்தும் நிற்பாய்நீ

என்று பாரதியார் பாடியது நம் சுவாமிகளுக்கும் பொருந்தும்தானே.

தாயுமானவரின் தாயுமானவரைத் தந்துள்ளேன்; படியுங்கள் பயனடையுங்கள்.

– தீபா மயிலப்பன்

# தாயுமானவர்

ஞானமே வடிவாகிய வயலூர் எம்பெருமான் திருவருளினாலே இந்த ஞானவேள்வியிலே இன்றைய தினம் பேச இருப்பது தாயுமான சுவாமிகள்.

இங்கே குழுமியிருக்கின்ற தாய்க்குலத்துக்கும் பெரியோர்களுக்கும் பணிவான வணக்கம்.

ஆன்மாக்களாகிய நாம் இந்தப் பூவுலகத்திலே வந்து பிறக்கிறோம். ஆன்மாவுக்கு அழிவு கிடையாது. அது என்றைக்கும் உள்ள பொருள். இறைவன் என்றைக்கு உண்டோ அன்றைக்கே ஆன்மாவும் உண்டு. தாயுமானவர் சொல்கின்றார்.

"என்றுநீ அன்று நான்!"

என்றும் நீயன்று நான். தனு கரண புவன போகங்களைத் தருகின்ற இறைவன் ஆண்டான். நாம் அடிமைகள். அவன் சுகசொரூபி, நாம் துக்க வடிவினர்.

ஆன்ம அறிவானது 'அறிவித்தால் அறிவது.' ஆனால் இறைவன் என்றைக்கு உண்டோ

அன்றைக்கே ஆன்மா உண்டு. ஆன்மாவைக் கடவுள் படைக்கவில்லை. இவையெல்லாம் நினைவில் வைத்துக் கொள்ள வேண்டிய பகுதி. கொஞ்ச நாளைக்கு முந்தி ஒருத்தர் கீர்த்தனை பாடினார்.

"வேலனே இந்த வீணனை ஏன் படைத்தாய்" - அடாணாவில் ஒரு கீர்த்தனை (பாஸ்கர ராஜு இயற்றியது) சிறு வயதில் பஜனையில் பாடுவார்கள். "வேலனே இந்த வீணனை ஏன் படைத்தாய்?" அந்தக் கருத்து, பிழை. இறைவன் ஆன்மாக்களைப் படைக்க வில்லை. ஆண்டவன் என்றைக்கு உண்டோ அன்றைக்கே ஆன்மர்வும் உண்டென்று திருமூலர் சொன்னார்.

**பதியினைப் போல்பசு பாசம் அனாதி**

ஆதி இல்லாதது அனாதி. இதைத் தாயுமான்ரார் சொன்னார்.

**என்றுநீ அன்றுநான்**

நீ என்றைக்கு உண்டோ நான் அன்றைக்கு உண்டு. அப்போது இறைவனும் ஆன்மாவும் ஒன்றா? இல்லை.

**என்றுநீ அன்றுநான் உன் அடிமை அல்லவோ**

இறைவனே நீ என்றைக்கு உண்டோ அன்றைக்கே நானும் உண்டு. ஆனால் நீ ஆண்டவன். நான் அடிமை. எதுபோல? 25 லட்ச

ரூபாய் பங்களா. ஒரு முதலாளி. ஏர் கண்டிஷன். அதே பங்களாவில் ஒரு வாட்ச்மேன் இருக்கிறான். அவர் ஆண்டானாக இருக்கின்றார். அவன் வாட்ச் மேனாக, அடிமையாக இருக்கின்றான். பிருந்தாவன் எக்ஸ்பிரஸ் பார்த்திருப்பீர்களே. ஏர்கண்டிஷனில் - மெத்தையில் உட்கார்ந்து இந்து பேப்பர் பார்த்துக் கொண்டு, போகின்றார், தகுதியுள்ள ஒருவர். வசதி இல்லாதவர் 'கீழ் வகுப்பில்' கூட்டத்தில் புளி மூட்டை மாதிரி ஒற்றைக்காலில் நடராஜர்போல நின்று கொண்டு போகின்றார். அரக்கோணம் வந்து விட்டதா என்பார். இன்னும் அவுட்டரே தாண்ட வில்லை என்பார் அவர். இவர் துக்கியாகப் பிரயாணம் செய்கிறார். அவர் சுகியாகப் பிரயாணம் செய்கிறார்.

தாயுமானாருக்கு என்ன பெருமையின்னா, அவர் வடமொழியிலும் கரைகண்டவர்; தென்மொழி யிலும் கரை கண்டவர். அதனால் நூலறிவும், மௌன குருவால் அனுபவ அறிவும் பெற்றுச் சிவஞானமூர்த்தியாக விளங்கியவர்.

தாயுமானார் அனுபவ ஞானமும் உள்ளவர். சாஸ்திர ஞானமும் உள்ளவர். அவர் கல்லாத கலை கிடையாது. ரொம்பப் பெரியவர். அந்த மகானைப் பற்றி மிகச் சிறியவன் பேசுகிறேன்.

தாயுமானார்ன்னா, தாயானார்ன்னு இருக்கணும். இஸ்லாமானார். இந்துவாயிருந்து இஸ்லாமா னார்ன்னு சொல்வாங்க.

தாயும் ஆனார் என்ற உம்மை எதைத் தெரிவிக்கும்? இறந்த காலம் தழுவிய எச்ச உம்மை இலக்கணத்திலே.

இப்ப அடியேன் பிரசங்கம் பண்றது உங்களுக்குத் தெரியும். பிரசித்தியா!

நான் ஒருநாள் மத்தளம் வாசித்தேன். மத்தளமும் வாசிக்கின்றார். மத்தளமும் என்ற உம்மையினாலே சொற்பொழிவு செய்கின்றார் என்பது விளங்கும். ஏ... சமையலும் பண்றாரே... நான் சமையலும் பண்ணுவேன். தண்ணியில்லாமலே சாம்பார் வைப்பேன். (சபையோர் ஆரவாரம்) பொய் சொல்ல மாட்டேன். இதெல்லாம் தெய்வபீடம். விளையாட்டுக்குக்கூட பொய் சொல்ல மாட்டேன். அதனாலே புருடா உடுராருன்னு யாராவது நினைச்சிடாதீங்க.

தண்ணியில்லாம குழம்பு வைக்கலாம், அது ஒரு கலை. நான் வீணை வாசிச்சேன். வீணையும் வாசிக்கின்றார். வீணையும் என்ற உம்மையினாலே, சொற்பொழிவு செய்வார் என்பது விளங்கும். இவ்வளவு சொன்னா போதுமே!

தாயுமானார் என்பதினாலே உலகத்துக்குத் தந்தை யாயிருக்கின்றான் என்பது விளங்கும்.

ஆகவே, ஆண்டவன் எல்லாருக்கும் தந்தையாக இருக்கின்றான்... ஜெகதாதை.

*அவன் மாமனாராக வந்து வழக்குரைத்தான் மதுரையிலே!*

*மருமகனாக வந்தான் காஞ்சன மாலைக்கு.*

*மகனாக வந்தான் வல்லாள ராஜாவுக்குத் திருவண்ணாமலையிலே.*

*திருச்சிராப்பள்ளியிலே ஒரு வைசிய குலப் பொண்ணு. வைசியர்ன்னா உங்களுக்குத் தெரியுமே! வசீகரிக்கின்றவர்.*

*தணிந்த சிந்தையுள்ளவர்கள் அந்தணர்கள்; பொறி புலன்களை வென்றவர்கள் அரசர்கள்; வசீகரிக்கின்ற வர்கள் வைசியர்கள்; பிறருக்கு உதவி செய்கின்றவர்கள் வேளாளர்கள்.*

*இந்த வைசிய குலத்திலே பிறந்தவள் இரத்தினா வதி. அவள் தாயார் வீடு காவிப்பூம்பட்டினம். கண வனார் வியாபார சம்பந்தமாக வெளியே போயிருக் கார். எப்பவும் புருஷாள் இப்படித்தான் ஆலா பறப்பார்கள்.*

*அவள் தினந்தோறும் மலையேறி மலைக் கொழுந்தாயிருக்கிறார் சிராப்பள்ளிநாதர். அவரை வணங்குவாள்.*

*அருணகிரியார் பாடினார்;*

**இந்தோடிதழ் நாகம காக்கடல்**
**கங்காளமி னார்சடை சூட்டிய**
**என்தாதைச தாசிவ கோத்திரன் அருள்பாலா**

**எண்கவடரு ளால்நெளவி நோக்கியை**
**நன்பூமண மேவிசி ராப்பளி**
**என்பார்மன மேனிதி நோக்கிய பெருமானே.**

*திருச்சிராப்பள்ளி மலைமேலே ஏறி சுவாமி கும்பிட வேண்டாம்.*

*"சிராப்பளி என்பார் மனமேனிதி நோக்கிய பெருமானே..." சிராப்பள்ளின்னு சொன்னா சுவாமி வந்துடுவாராம்.*

**அரிச்சி ராப்பகல் ஐவரால் ஆட்டுண்டு**
**சுரிச்சி ராதுநெஞ் சேயொன்று சொல்லக்கேள்**
**திருச்சி ராப்பள்ளி என்றலும் தீவினை**
**நரிச்சி ராது நடக்கும் நடக்குமே**

*அப்பர் வாக்கு. திருச்சிராப்பள்ளின்னு சொன்னா தீவினை போயிடுமாம். மகா வித்வான் மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்கள் அவதரிச்ச ஊர். அதுதான் தாயுமானவ சுவாமி அவதாரம் பண்ணினதும்.*

*பள்ளின்னா 'ஒளி' என்று அர்த்தம். பளபளன்னு இருக்கிறது என்கிறார்களே, தவப்பள்ளி... அறப் பளீச்சுரர்ன்னு கொல்லிமலையிலே. ஒரு சதகமே இருக்கு, அறப்பளீச்சுர சதகம்ன்னு.*

*இராமர் தபசு பண்ற இடத்துக்குத் தவப்பள்ளி என்று பேர்.*

**நற்றவப் பள்ளி வாயிலை நண்ணினான்** *என்பது இராமாயணம்.*

சிராப்பள்ளின்னா திரிசிரன் என்ற ஒரு பக்தனாலே பூஜை செய்யப்பட்ட ஸ்தலம் திருச்சிராப்பள்ளி. திருச்சிராப்பள்ளின்னா உங்களுக்கு யார் ஞாபகம் வருது. மீனாட்சி சுந்தரம் பிள்ளை. பத்துக் கம்பன். லட்சம் கவி பாடினார். அவரையெல்லாம் யார் நினைக்கிறாங்க. நான்தான் ஓயாம சொல்லிக் கொண்டிருக்கிறேன்.

அந்த ஊர்லதான் இரத்தினாவதி என்ற செட்டிப் பெண் வாழ்கிறாள். அவள் தினந்தோறும் மலையேறி எம்பெருமானை வழிபடுவாள். சுவாமி பேர் மலைக் கொழுந்தீசர். இந்த மலையே லிங்கமா இருக்கு. லிங்கம் தனியா வச்சது இல்லை.

அவள் கருவடைந்தாள். அம்மாவுக்குத் தபால் போட்டாள். "மாப்பிள்ளை ஊர் ஊரா சுத்திக்கினு இருக்கார். என்னை சரியா கவனிச்சிக்கிறதுக்கு அவருக்கு நேரமில்லை. நீ வந்து உதவி செய்."

மகள் கர்ப்பமாச்சே நாம்ப உதவிக்குப் போகலாம்னு ரெண்டு வேலைக்காரரை அழைச்சிக்கினு, காயமருந்து இன்னும் மகளுக்கு என்னென்ன தேவையோ எல்லாம் எடுத்துக் கொண்டு வருகிறாள்.

அப்போதெல்லாம் பாலம் கிடையாது. காவிரியிலே வெள்ளம். நதி தாண்டி வர முடியலை. அக்கரையிலே தவிக்கிறாள். மகளைப் பார்க்கணும்னு அக்கறை. தவிக்கிறாள். அங்கே அவளுக்குப் பிரசவ

வேதனை வந்துருச்சி. என்ன செய்வாள் இளம் பெண். தலைப் பிரசவம்.

"பரமேஸ்வரா, ஆண்டவனே, புருஷனுமில்லே அம்மாளும் வரலே. எனக்கு உலகமே சுத்தறாப்பல இருக்குதே சுவாமி."

கருணைக் கடலான ஆண்டவன் தாயார் வடிவத்திலே வந்தார். கங்காதேவியும் உமாதேவி யாரும் நர்சுகளாக வர...

எப்பவுமே பெண்கள்தான் நர்சு வேலைக்கு வருவாங்க. என்ன காரணம்னா பேஷன்ட் வெந்நீர் கேட்டா, எத்தனைமுறையும் கொடுப்பாங்க. ஆம்பளைய நர்சு வேலைக்குப் போட்டா ஒருமுறை கொடுப்பான். ரெண்டுமுறை கொடுப்பான். மூன்றா வது முறை கொடுப்பான் கன்னத்திலே. புருஷாளுக்கு சட்டுன்னு கோபம் வந்திடும். தாய்க்குலத்துக்கு வராது.

ஆகவே, கங்கையும் உமாதேவியாரும் நர்சு களாக வருகிறார்கள். அவர்கள் தலையிலே காய மருந்து மூட்டையை வச்சிக்கினு வர்றாங்க. வந்திருக் கிறவன் உலக நாயகன். அவளுக்குத் தெரியுமா? நம்ம அம்மா தான் வந்துட்டாள்னு நினைக்கிறா.

"ஏம்மா லேட்டா வந்தே?"

"காவேரியிலே வெள்ளம் மகளே, வரமுடியலே. உங்கப்பாதான் இவ்வளவு சாமான்களை எல்லாம் கொடுத்தனுப்பிச்சார்."

"உடம்பு என்னவோ போல சுத்துது அம்மா. நாடி நரம்பு எல்லாம் வலிக்கிறது."

இந்தக் கண்வலி வந்தா இங்கதான் வலிக்கும். பிரசவம்னா அங்கமெல்லாம் வலிக்கும். அதான் அங்க மெல்லாம் நொந்துன்னு பட்டினத்தார் பாடறார்.

பரமேஸ்வரன், கருணைக்கடல். அவர் வைத்திய நாதர். அந்த உடம்பையெல்லாம் பிடித்து விட்டு எந்த இடத்தில் எப்படிச் செய்யணுமோ அந்தச் சிகிச்சை யெல்லாம் பெருமான் செய்தார். சிரசு உதயமாச்சு. குழந்தை பிறந்தது. ஒரு மெல்லிய துணி யெடுத்து தொடச்சி விட்டுத் தொப்புள் கொடியை அறுத்து விளக்கெண்ணெய் வைத்து, "அம்மா, மாப் பிள்ளை போலவே இருக்கிறான். அவங்க அப்பனை உரிச்சிக்கினு பொறந்திருக்கிறான்" என்று கொஞ்சிப் பேசுகிறாள்.

காவேரியில் வெள்ளம் வடிஞ்சி அந்த அம்மா வந்துட்டாள். இங்க ஒரு அம்மா அங்கவொரு அம்மா. இரத்தினாவதி பார்க்கிறாள். "இது அம்மாளா? அது அம்மாளா?" குழம்புகிறாள்.

சுவாமி காட்சி கொடுத்து, "மகளே இந்த உடம்புக்கு அவங்க அம்மா. ஆத்மாவுக்கு நான் அம்மா. மகளே நீ சௌக்கியமா இரு" என்று சொல்லி விட்டு மறைகிறார்.

அப்ப, தந்தையா இருக்கிற ஆண்டவன்

இரத்தினாவதி என்கிற பெண்ணுக்குத் தாயாக வந்தான். அதனாலே, தாயுமானார்.

தாயுமானார் என்ற எச்சவும்மையினாலே தந்தை யாக இருக்கின்றான் என்பது பொருள். சுவாமிபேர் தாயுமானார். ஒவ்வோர் ஊரிலே பெருமானுக்கு ஒவ்வொரு பேர் வரும்.

மிளகு வியாபாரி செட்டியார் ஒருவர். வியா பாரத்துக்காகப் போகிறபோது கள்ளர்கள் வழி மறித்தார்கள்.

"ஆண்டவனே என்னைக் காப்பாற்றினால் இந்த மிளகெல்லாம் விற்று கோயில் கட்டறேன்"னு வேண்டிக் கொண்டார். சுவாமி இராணுவ மூர்த்தியா வந்து காப்பாற்றினார்.

செட்டியார் அந்த மிளகு மூட்டைகளை விற்றுக் கோயில் கட்டினார். அதுதான் விரிஞ்சிபுரம். வழி யில் வந்து பக்தனைக் காப்பாற்றியதாலே சுவாமி பேர் மார்க்கசகாயர், மார்க்கபந்து. தமிழிலே வழித் துணை நாதர்.

இப்படி ஒவ்வொரு இடத்திலே ஒவ்வொரு வகையா வந்து எம்பெருமான் அருள்புரிவான். இந்த இடத்திலே தாயும் ஆனார். கருணைக்கடலான தெய்வம் எம்பெருமான்.

பதினேழாம் நூற்றாண்டிலே திருமறைக் காட்டிலே சைவ குலத்திலே கேடிலியப்ப பிள்ளை.

வழிவழியா சைவ குடும்பத்திலே வந்தவர் அந்த கேடிலியப்ப பிள்ளை. கேடிலியப்ப பிள்ளையின் துணைவியார் கெஜவல்லியம்மை. இவர்களுக்கு மூத்த மகனாகப் பிறந்தவர் சிவசிதம்பரம். கேடிலியப்ப பிள்ளையின் அண்ணன் வேதாரண்ய பிள்ளைக்குப் புத்திரப் பாக்கியம் இல்லாததாலே கேடிலியப்ப பிள்ளை தன் மகன் சிவசிதம்பரத்தை அண்ணனுக்குச் சுவீகாரம் செய்து வைத்து விட்டார். அவர் தொழில் நிமித்தமாக திருச்சிராப்பள்ளிக்கு வந்தார்.

இங்கிருக்கிறவங்க பம்பாயிலே போய் வியாபாரம் பண்ணுவாங்க, டில்லியிலே போய் வியாபாரம் பண்ணுவாங்க.

அதுமாதிரி கேடிலியப்ப பிள்ளை வியாபாரம் செய்து வருகிறார்.

அப்போது திருச்சிராப்பள்ளியை நாயக்க மன்னர் ஆளுகின்றார்.

அந்த நாயக்கர் மன்னர்கிட்டே இவர் காரியஸ்தரா இருக்கார். யாரு கேடிலியப்ப பிள்ளை.

சிலபேர்கிட்ட நல்லது இருக்கும்; கொஞ்சம் கெடுதலும் இருக்கும். ரொம்பப் பெரியவரா இருப்பார்; கொஞ்சம் கோவிச்சுக்குவார். ஆண்டவன் அப்படியில்லே. நன்றுடையானை, தீயதில்லானை. நன்றே உள்ளது. தீமை அணுவளவும் இல்லாதவன்.

இந்தத் தேவாரந்தான் எல்லாரும் கேட்டிருப்பீங்களே.

நன்றுடையானை தீயதி லானை நரைவெள்ளேறு
ஒன்றுடையானை உமையொரு பாகம் உடையானைச்
சென்றடையாத திருவுடை யானைச் சிராப்பள்ளிக்
குன்றுடையானைக் கூறவென் உள்ளங் குளிரும்மே!

அப்படி தேவாரம், திருப்புகழ் பாடல் பெற்ற தலம். அந்தத் திருச்சிராப்பள்ளியை ஆண்ட நாயக்க மன்னர்கிட்ட கேடிலியப்ப பிள்ளை காரியஸ்தராக இருக்கிறார். அவருடைய மனைவி பேர் கெஜவல்லி என்று முன்பே கூறினேன். இருவரும் தாயுமான சுவாமியைப் பணிந்து தங்களுக்குப் புத்திரப்பேறு உண்டாகுமாறு வேண்டினர். தாயுமானவர் அருளால் ஆண்மகவு பிறந்தது. தாயுமானவன் என்றே குழந்தைக்குப் பெயர் சூட்டினர்.

இப்ப கோடீஸ்வரனுக்குக் குழந்தை கிடையாது. என்ன காரணம்ன்னா... அத்தனை செல்வத்தையும் அனுபவிக்கக் கூடிய புண்ணியம் ஒருத்தன் பண்ணலை. அதனால அவங்க வீட்டில வயிறு காலியாயிருக்கு. ஒரு கோடீஸ்வரனுக்குக் குழந்தை பிறந்தா அந்தக் குழந்தைக்குத்தானே அத்தனை சொத்தும். பாடுபடாமலேயே ஒரு கோடி சொத்துக்கு அதிகாரியா வரவேணுமானால் எவ்வளவு செப தபங்கள் பண்ணியிருக்கணும்?

திருவள்ளுவருக்கு ஏன் குழந்தை இல்லை?

அவரை அப்பா என்று அழைக்கக்கூடிய புண்ணிய வான் நாட்டிலே இல்லே! ஒரு ஞானியை அப்பான்னு அழைக்க- ஒரு தவம் பண்ண வேணாமா? ரொம்ப மகான்களுக்குக் குழந்தை யில்லேன்னா அவரை அப்பான்னு அழைக்கக்கூடிய மாதவம் செய்த ஒரு ஆத்மாயில்லைன்னு அர்த்தம்.

கேடிலியப்பர் எந்தக் கேடும் யாருக்கும் செய்ய மாட்டார். இந்தக் கொசு வந்து இங்கே உட்காரும். நீங்க என்ன செய்வீங்க? இப்படி ஓட்டுவீங்க. சிலபேர் என்ன செய்யறாங்க. அடிச்சி எத்தனை செத்துப் போச்சின்னு பார்க்கிறாங்க. கொசுவை அடிக்கிறதா ஒரு பெருமை. இங்கே உட்கார்ந் திருக்கின்ற தாய்மார்கள், தேங்காய் மூடியிலே எறும்பு வந்தா வெளியிலே கொண்டுபோய், ஓரமா நிழலிலே தட்டறாங்க. எனக்குத் தெரியும். சில ஊர்லே வெயிலிலே கொட்டி தேய்ச்சிடுவாங்க.

**தன்னுயிர் நீப்பினும் செய்யற்க தான்பிறிது**
**இன்னுயிர் நீக்கும் வினை.**

என்று சொல்லுவார் திருவள்ளுவர்.

இறையுணர்வோடு தாயுமானார் வளர்கிறார். அவருக்கு வாய்த்த குரு திருமூலர் மரபில் வந்த மௌன குரு என்பவர்.

பெத்தவங்க விருப்பத்துக்கும் குருநாதரின் கட்டளைக்கும் கட்டுப்பட்டு மட்டுவார்குழலி என்னும் பெண்ணை மணமுடித்துக் கொள்கிறார்.

2

தாயுமானாருக்கு கனகசபாபதின்னு ஒரு ஆண் குழந்தை. சில வருஷத்திலே மட்டுவார்குழலி காலமாயிட்டார். தாயுமானாரின் அண்ணன் சிவ சிதம்பரமே அக்குழந்தையை வளர்க்கும் பொறுப்பை ஏற்றுக்கொண்டார்.

தாயுமானார்க்கு ஒரு இச்சை வந்ததாம். இச்சையே இல்லாதவருக்கு என்ன இச்சை?

**கொல்லா விரதம் குவலயம்எல் லாம்ஓங்க**
**எல்லார்க்கும் சொல்லுவதுஎன் இச்சை பராபரமே!**

**கொல்லா விரதம்ஒன்று கொண்டவரே நல்லோர்மற்று**
**அல்லாதார் யாரோ அறியேன் பராபரமே!**

அவங்க யாரோ தெரியாதப்பா. அவ்வளவு அழுத்தம் அவருக்கு. தாயுமானார் பாடல் உலகத்தை யெல்லாம் விலை மதிக்கும். மத்தவங்க எல்லாம் விநாயகர் தோத்திரம் பாடறாங்க. அருணகிரியார் கூட 'கைத்தல நிறைகனி அப்பமொடு அவல்பொரி!' என்று தொடங்கும் திருப்புகழ் பாடறார்.

செட்டி நாட்டிலே ஒரு நூறுன்னா ஒரு பிள்ளை யார்ன்னு சொல்லுவாங்க. அது ஒரு பரிபாஷை. ஒரு பிள்ளையார் கொடுத்தார்ன்னா நூறு கொடுத் தார்ன்னு அர்த்தம். நீங்க திருவண்ணாமலை, போய்ப் பாருங்க. இரண்டு இரண்டு பிள்ளையார் வச்சிருப் பாங்க. மதுரை மீனாட்சி கோயிலிலே இரட்டைப் பிள்ளையார். ஒரு பிள்ளையார்ன்னா நூறு.

இரட்டைப் பிள்ளையார்ன்னா இருநூறு. இந்தக் கைத்தல நிறைகனியை எண்ணிப் பாருங்க. இருநூறு எழுத்திருக்கும். இப்பவே எண்ணிச் சொல்றேன். க், ண், த், ப் மெய்யெழுத்தெல்லாம் எண்ணிக்கையில் சேராது. சென்சஸ் எடுக்கிறப்ப, நடையிலே ஒண்ணு நீட்டிக்கினு இருந்தா அதையுமா எண்ணுவான்? வெறும் பாடி (body) தானே அது.

அப்ப உயிரில்லாத உடம்பு எண்ணிக்கையில் சேராது. அதுபோல, மெய்யெழுத்துகள் எண்ணிக்கையில் சேராது. கை தல நிறைகனி ஏழு எழுத்தாச்சா. அ, ப, மொ, ட, வ, பொ, ரி ஏழு ஆச்சா. க, பி, ய, க, ரி, மு, க, மூவேழு 21. அடிபேணி 4. ஆக 21 + 4 = 25. அப்ப எட்டடிக்கு 8 × 25 = 200. பாடற போதே எழுத்தெண்ணி பாடறார். தினமும் படிக்கிறோமே... 200 எழுத்து இருக்குதுன்னு யாருக்குத் தெரியுது? சொன்னாத்தானே தெரியுது. இப்ப நானா போய் ஸ்பீக்கர் வைச்சி சொல்ல முடியுமா? இப்படி யாராவது இருந்து 'சாமி ஜனங்களுக்கு சொல்லுங்கன்னு ஏற்பாடு செஞ்சாதானே முடியும்? இது ஒரு ஞான யக்ஞம்.

அந்தக் கந்தரலங்காரம் அருணகிரியார் பாடியிருக்கிறாரே. ஒரு வரிக்கு பதினாறு எழுத்திருக்கும். 'மாலோன் மருகனை மன்றாடி மைந்தனை வானவர்க்கு...'

சீர்காழி என்ன அழகா பாடினார். அந்த இசையுலகமே இருண்டு போச்சி அவருக்குப் பின்னாலே.

அவங்கெல்லாம் விநாயகரைப் பாடி தொடங்குவாங்க. "ஐந்து கரத்தனை ஆனை முகத்தனை" திருமூலரின் திருமந்திரம். ஆனா தாயுமானார் அப்படியல்ல. அவர் வழியே வேற.

எடுத்த எடுப்பிலே பிள்ளையார் பாட்டோ இன்னொரு பாட்டோ இல்லே. எடுத்த எடுப் பிலேயே கடவுள் அங்கே இருக்கார்ன்னா ஒருத்தன், இங்கே இருக்கார்ன்னான் ஒருத்தன். அங்கன்னா கைலாசம். இங்கன்னா சிதம்பரம். எல்லாரும் பாடிப் பாடி அனுபவம் பெற்றார்கள். தாயுமானவர் அனுபவம் பெற்ற பின் பாடினார்.

எடுத்த எடுப்பிலேயே "அங்கிங்கெனாதபடி எங்கும் பிரகாசமாய் ஆனந்த பூர்த்தியாகி அருளொடு நிறைந்தது எது?" வேதாந்த சித்தாந்த தத்துவத்தைப் பிழிந்து கொடுக்கின்றார். மதுரை மணி ஐயர் எடுக்கிற போதே களை கட்டும். சிலபேர் அரை மணி நேரம் தொண்டையைக் கனைத்த பிறகுதான் களை கட்டும். மகா வித்வான்களெல்லாம் அப்படி யில்லை. எடுக்கிறபோதே நன்றாயிருக்கும்.

**அங்கிங்கு எனாதபடி எங்கும் ப்ரகாசமாய்**
**ஆனந்த பூர்த்தியாகி**
**அருளொடு நிறைந்தது எது?**

கேள்வித்தாளை கையிலே கொடுக்கிறார். அங்கிங்கெனாதபடி அங்கு என்பது சேய்மைச் சுட்டு.

இங்கு என்பது அண்மைச் சுட்டு. அங்கேயிருக்கிறான் கைலாசத்திலே வைகுண்டத்திலே இவர் சொன்னாரு... ஸ்ரீரங்கத்திலே சிதம்பரத்திலே.

இல்லப்பா. அங்கிங்கென்ாதபடி எங்கும் பிரகாசமாய்!

நடந்தே பிரயாணம் பண்ணவங்க ஔவையார். அப்ப எல்லாம் விமானம் ஏது? பஸ் ஏது? ரயில் ஏது? ஒரு சிவன் கோயிலிலே வந்து, பாவம், தளர்ச்சி. வயசானவ. சாமிக்கு நேரா காலை நீட்டி உட்கார்ந்திருக்கிறாள்.

ஒரு பெண்மணியைக் கண்டால் இன்னொரு பெண்மணிக்கு ஒத்துக்காது. அவ, என்ன ராங்கா புடவை கட்டிக்கினு வர்றா.... அதே கவனமா இருப்பாங்க. யார் யாரு என்னென்ன புடவை கட்டுறாங்க. எப்படி வர்றாங்க என்பதிலே நாட்டமா இருப்பாங்க.

உமாதேவியார் பெருமானை நோக்கி, "சுவாமி, இந்த ஔவை உலகத்துக்கெல்லாம் நீதி சொல்றவ. லிங்கத்துக்கு நேரா கால்நீட்டிக்கினுகீறா!" என்கிறார்.

"உமா! அவ ரொம்ப படிச்சவ. விஷயம் தெரிஞ்சவ. அவகிட்ட வாய் கொடுக்காதே" என்று பெருமான் கூறுகின்றார்.

பார்வதிக்குப் பொறுக்கலை. ஔவையை நோக்கி, உமாதேவியார் "அம்மா ஔவை, ரொம்ப

படிச்சவளாச்சே நீ. சாமிக்கு நேரா கால் நீட்டிக் கொண்டு இருக்கின்றனையே, இது நியாயமா, தகுமா?" என்கிறார்.

ஔவையார் எழுந்து, பார்வதியார் காலிலே விழுந்து "தாயே என்னை மன்னிச்சிடம்மா. அவர் இல்லாத இடமா பாத்துக் காட்டு. அந்தப் பக்கமா காலை நீட்டிக்கிறேன்."

"பார்வதி போதுமா!" பெருமான் தேவியாரை பார்த்துச் சிரிக்கின்றார்.

ஒரு ராஜாவிடம் எல்லோரும் போய் ஆளுக் கொரு பழம் கொடுத்தாங்க. மாம்பழம் ஒருத்தர், ஆப்பிள் பழம் ஒருத்தர், ஆரஞ்சுப் பழம் ஒருத்தர்.

என்னைப் பார்க்க யாராவது வந்தா பழங்கள் கொடுப்பாங்க.

ராஜா சொன்னாரு. "பெருமக்களே, சபை யோர்களே, தாய்மார்களே, கடவுள் இருக்கு மிடத்தைக் காட்டினா இதை உங்களுக்குத் தர்றேன்" என்று.

எல்லாரும் பேசாம நின்றார்கள். இறைவன் இருக்குமிடம் என்று எதைக் காட்டுவது? குழம்பிய படி நின்றார்கள்.

ஒரு பெண்குழந்தை எழுந்தது. "ராஜா நீங்க என்ன சொன்னீங்க?"

"ஈஸ்வரன் இருக்குமிடத்தைக் காட்டு!" என்றேன்.

"மகாராஜா ஈஸ்வரன் இல்லாத இடத்தைக் காட்டுங்க. நான் உங்களுக்குப் பன்னிரண்டு பழங்கள் தருகிறேன்."

அரசன் விழித்தான். இறைவன் எங்குதான் இல்லை. "அங்கிங்கெனாதபடி எங்கும் பிரகாசமாய்" ஒளிதானே எங்கும் நிறைந்திருக்கும். எங்கும் பிரகாச மாய். இப்ப ராஜீவ்காந்தி ஒரு பக்கம் போவாரா னால் அந்தப் பக்கம் ரோடுகள் எல்லாம் ஒழுங்கா இருக்கும். அதிகாரி வந்தா ரோடு ஒழுங்கு பண்ணி வைப்பாங்க. அறநிலையத் துறை அமைச்சர் வந்தார்ன்னா கோயில்கள் ஒழுங்கா இருக்கும். ஒட்டடை இல்லாம - அதிகாரி வரும்போது கண்ணாடி மாதிரி சுத்தமா வைச்சிருப்பாங்க. அப்ப, அந்தந்த இடங்கள் நலம்பெறும் பொருட்டுத்தானே அதிகாரிகள் போறாங்க. ஆண்டவன் இருக்கிறத னாலே உலகம் க்ஷேமமாயிருக்குது.

எங்கும் பிரகாசமாய்... இருட்டு மனிதனுக்குத் துன்பத்தைக் கொடுக்கும்.

இருட்டிலே வரான் திருடன்.

ஒருத்தர் இரண்டாவது படம் பார்த்துட்டு வீட்டுக்குப் போனாரு. சுவிட்ச் போட்டா லைட் எரியலை. டிரான்ஸ்பாரத்திலேயே போயிடிச்சி.

ஒண்ணும் பண்ண முடியாது. "சிவகாமி, தீப்பெட்டி எங்கே?"

"அதான் வச்ச இடம் தெரியலை."

இப்ப, நம்ம வீட்டிலே கரண்ட் போனா, பீஸ் போட்டுக்கலாம். டிரான்ஸ்பார்மரிலே போயிட்டா. ஒண்ணும் பண்ண முடியாதல்லவா!

அப்படியே கையை வச்சாரு. வழவழன்னு இருந்தது.

"பார்வதி என்னாது?"

"அது குழந்தை வாந்திங்க. தொடைக்கிறதுக் குள்ள கரண்ட் போயிடிச்சி."

இவர் அப்படியே பக்கத்திலே கம்பம்னு நெனைச்சி துடைக்கிறார். அங்கே மாமியார் நிற்கிறார்.

"மாப்பிள்ளை, மாமி நான்!" என்ற குரல் கேட்கிறது.

"இருட்டிலே எனக்கு ஒண்ணும் தெரியலை. கம்பம்னு நெனைச்சிட்டேன். மன்னிச்சிக்குங்க மாமி!"

வேணும்னு செய்யலை. இருட்டிலே நிகழ்கிற நிகழ்ச்சிகள். இருட்டிலே யார்தான் என்ன செய்ய முடியும்? துன்பத்தை இருட்டு தரும். இன்பத்தை ஒளி தரும். அதனால்தான்,

ஒளியில் விளைந்த உயர்ஞான பூதரத் துச்சியின்மேல்
அளியில் விளைந்ததொ ரானந்தத் தேனை அநாதியிலே
வெளியில் விளைந்த வெறும்பாழைப் பெற்ற வெறுந்தனியைத்
தெளிய விளம்பியவா முக மாறுடைத் தேசிகனே!

*என்று அருணகிரியார் பாடுகின்றார். ஒளியில் விளைந்த உயர் ஞான பூதரத்தின் உச்சியின் மேல்...... விளங்குதா?*

அங்கிங்கு எனாதபடி எங்கும் ப்ரகாசமாய்
ஆனந்த பூர்த்தியாகி
அருளொடு நிறைந்ததெது தன்னருள் வெளிக்குளே
அகிலாண்ட கோடியெல்லாம்
தங்கும் படிக்குஇச்சை வைத்துஉயிர்க்கு உயிராய்த்
தழைத்தது எது? மனவாக்கினில்
தட்டாமல் நின்றது எது?

*தாயுமானாருக்கு ஒரு குரு இருந்தார். மௌன குரு என்று பெயர். திருமூலர் மரபிலே வந்தவர். தாயுமானாருக்கு அவர் உபதேசம் பண்ணினாராம். "மகனே! மண், தண்ணீர், நெருப்பு, காற்று, ஆகாயம் நீ அன்று; மெய், வாய், கண், நாசி, செவி நீ அன்று; சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் நீ அல்ல; மனம், புத்தி, சித்தம், அகங்காரம் நீ அல்ல. அறிவுதான் நீ" என்றாராம்.*

பார்ஆதி பூதம்நீ அல்லை உன்னில்
பார்இந் திரியம் கரணம் நீ அல்லை
ஆராயும் அறிவுநீ என்றான்.

ஆகவே, "என் குருநாதர் எனக்குச் சொன்னார்" என்ற தாயுமானார் திருவாக்கிலேயிருந்து என்ன நமக்கு விளங்குகிறது? அறிவும் ஆன்மாவும் ஒன்று. இந்த உடம்பும் உயிரும் ஒன்றல்ல. உடம்பிலே உயிர் குடியிருக்கிறது.

குடம்பை தனித்தொழியப் புள்பறந் தற்றே
உடம்போடு உயிரிடை நட்பு

என்றார் திருக்குறளிலே. குடம்பை என்றால் கோழி முட்டை. தாய்க்கோழி அடை காத்தால் முட்டையிலிருந்து வருவது குஞ்சு. முட்டை வேறுபடுகிறது. அப்படி இந்தச் சரீரம் நின்று விடுகிறது. ஆத்மா வெளியே போய் விடுகிறது. சுவர்க்கத்துக்கோ, நரகத்துக்கோ போகிறது.

கரப்பவர் தங்கட்கு எல்லாம்
கடுநர கங்கள் வைத்தார்

என்றார் திருநாவுக்கரசு சுவாமிகள்.

நம்பினார் இறந்தால் நமன்தமர் பற்றி
எற்றிவைத் தெரியெழு கின்ற
செம்பினால் இயன்ற பாவையைப் பாவீ
தழுவென மொழிவதற்கு அஞ்சி.

என்பார் சுந்தரர்.

இப்போது நமக்கெல்லாம் மின்சாரத்திலே கை வைத்தால் ஆபத்து என்று தெரியும். சாத்திர ஞானம். அனுபவம் கிடையாது. ஈரத் துணியினாலே (பூஜை

ரூமிலே) சுவிட்சிலே கை வைத்தால் 'ஹா' என்கிறோம். 'ஷாக்' என்பது தொட்டால்தான் தெரியும். அது அனுபவ ஞானம். அதைத்தான் தாயுமானார் சொன்னார். இந்த உலகத்தையெல்லாம் பார்க்கின்றாராம் தாயுமானார். உலகம் தெரியவில்லையாம். எல்லாம் சிவமாகத்தான் தெரிகின்றது. எப்படிச் சொன்னார்? ஆண்டவனே,

**பாரில் கண்டவை யாவும் பருகினை**

இந்த உலகமே அவருக்கு மறைந்து விட்டது. எல்லாம் சிவமாகக் காட்சியளிக்கின்றது. அதை எப்படிச் சொல்லுகின்றது?

**ஊமன் கனவென யாருக்கும் சொல்ல**
**வாயிலை ஐயனே**

ஊமைக்கும் அறிவு உண்டு. ஓர் அற்புதமான கனவு கண்டான். நான் பிள்ளையார்பட்டிக்குக் கதைக்குப் போயிருந்தேன். அன்றைக்கு ஏதோ ஒரு நல்ல நாள். கைலாசத்துக்குப் போவது மாதிரி கனவு கண்டேன். ரிஷிகள் மணி அடிக்கின்றார்கள். நான் அந்தக் கனவை யாருக்கும் சொல்லவில்லை. அதற்குப் பிறகு. நான் தூங்கவில்லை. நல்ல கனவு கண்டால் அதற்குப்பின் தூங்கக் கூடாது. நல்ல கனவு கண்டால் நாலு பேருக்குச் சொல்லலாம் என்று தோன்றும். அப்பொழுது நல்ல கனவை ஊமன் கண்டான். எப்படிச் சொல்வான்?

அவனுக்குத்தான் வாயில்லையே. (ஜாடையாகக் காட்டுகிறான்) அப்படி அனுபவத்தைச் சொல்ல மாட்டாமல் திணறுகின்றாராம், தாயுமானார்.

**வாரிக் கொண்டுளனை வாய்மடுத்து இன்பமாய்ப்**
**பாரில் கண்டவை யாவையும் பருகினை**
**ஓரில் கண்டிடும் ஊமன் கனவுஎன**
**யாருக் கும்சொல வாயிலை ஐயனே**

வேதாந்த சித்தாந்த சமரச நிலையை உலகத்துக்குச் சொல்ல வந்தவர் தாயுமானவ சுவாமிகள். வேதாந்தம் ஒரு நெறி. சித்தாந்தம் ஒரு நெறி. இரண்டுக்கும் பாலம் போட்டார்.

**"வேதாந்த சித்தாந்த சமரசநன் னிலைபெற்ற**
**வித்தகச் சித்தர் கணமே"**

என்பார்.

வேதத்தின் அந்தம் வேதாந்தம். அந்தத்தின் அந்தமாக இருப்பது சித்தாந்தம். வேதாந்தத்திலே ஒண்ணுன்னு சொல்லும். சித்தாந்தத்திலே மூணுன்னு சொல்லும். பதி, பசு, பாசம். ஆனா முடிந்த முடிவிலே ஒன்றாகி விடும்.

"தத்வமசி!" தத் - அது; துவம் - நீ; அசி - ஆகின்றாய். அது நீ ஆகின்றாய். எதுபோல, உப்புன்னா உங்களுக்குத் தெரியும். அப்புன்னா தண்ணீர். ஒரு நாழி உப்பு, ஒரு நாழி அப்பு. ஒரு குண்டானில் போட்டாங்க. ஒரு நாழி உப்பு ஒரு

நாழி அப்பு இரண்டும் போட்டாச்சி. அவை இரண்டு நாழியிருக்குமா? அந்த அப்பிலே உப்பு கரைஞ்ச மாதிரி, சிவத்திலே ஜீவன் கரைஞ்சிடும்.

"நாழியுப்பு நாழியப்பு நாழியான வாறுபோல்" - என்று சிவவாக்கியர் பாடியதுபோல் இங்கே சீவன் சிவமாகி விடும்.

அப்படி சீவனும் சிவனும் ஒன்றாகி விட்ட வர்கள் பூஜை பண்ணமாட்டார்கள். அவங்களே சிவமாகி விட்டார்களல்லவா? ஏணி மேலே ஏறி விட்டவனுக்கு ஏணி தேவையில்லை. ஒரு படத்தை வச்சி உபாசனை பண்றான். மனம் ஒடுங்கி விட்டா படம் தேவையில்லை. நல்லா கவனிச்சி கேளுங்க. ஒரு தண்டாயுதபாணி படத்தை வச்சி அதுலயே மனசை வச்சி மனசை ஒடுக்கிறார். மனம் ஒடுங்கிவிட்டது. அப்புறம் படம் தேவையில்லை. இதைத்தான் சித்தர் பாடினார்.

**மாங்காய்ப் பாலுண்டு**
**மலைமேல் இருப்போர்க்குத்**
**தேங்காய்ப்பால் ஏதுக்கடி - குதம்பாய்**
**தேங்காய்ப்பால் ஏதுக்கடி.**

பதினெட்டு சித்தர்களில் ஒருத்தர் குதம்பைச் சித்தர். அதற்கு மாங்காய்ப்பால், தேங்காய்ப்பால்னு அர்த்த மல்ல. எல்லாம் கோடு வார்த்தைகள். இந்த மாங்காய்ப்பால்ன்னா... மாங்காயைக் கடிச்சா உதடெல்லாம் புண்ணாய்ப் போகும். அந்த வாய்ப்

*'கடும்பு' கடும்பு என்றால் சுற்றத்தார்; பெரியப்பா பிள்ளை சிற்றப்பா/பிள்ளை போன்றவர்.*

வந்து தலைநவிர விழ்ந்து தரைபுகம
யங்க ஒருமகிட மிசையேறி
அந்த கனும்எனைய டர்ந்து வருகையினில்
அஞ்ச லெனவலிய மயில்மேல்நீ
அந்த மறலியொடு கந்த மனிதன்நம
தன்ப னெனமொழிய வருவாயே

*தாலீபுலாக ஞாயமாக ஒரு பாட்டு சொன்னேன். இந்த மாதிரி ஐம்பது பாட்டு சொல்வேன். ஒரு பானை சோற்றுக்கு ஒரு சோறு பதம். "சுவாமீ! மரண பயம் வரும்போது என்னைக் காப்பாற்று" என்றார்.*

"இழுக்க வந்திடு தூதர்க ளானவர்
பிடிக்கு முன்புன தாள்மல ராகிய
இணைப்ப தந்தர வேமயில் மீதினில் வரவேணும்"

*அப்பொழுது அருணகிரியார் எமனுக்கு அஞ்சு கின்றார்.*

தண்டா யுதமுந் திரிசூல மும்விழத் தாக்கியுன்னைத்
திண்டாட வெட்டி விழவிடு வேன்செந்தில் வேலனுக்குத்
தொண்டா கியஎன் அவிரோத ஞானச் சுடர்வடிவாள்
கண்டா யடாஅந்தகா வந்து பார்சற்றென் கைக்கெட்டவே.

*அதே அருணகிரியார்தான் இங்கு எமனை அஞ்ச வைக்கின்றார். பெண் வாங்குகிறவரை பணிந்*

திருப்பான். பெண்ணை வாங்கிவிட்டால் அப்புறம் வேறு மாதிரி. "உங்கப்பா பிச்சைக்காரன்டி" என்பான்.

இந்த ஏற்றம் இருக்கிறதே அது தண்ணீர் இறைக்கிற போது வணங்கி நிற்கும். மொண்டு கொண்டால் நிமிர்ந்து கொள்ளும். அதற்குத்தான் ஏற்றம் என்று பெயர். நம்மிடம் காரியம் சாதிக்கிற வரைக்கும் கையைக் கட்டிக் கொண்டு நிற்பான். சாதித்த பிறகு வேறுபடுவான். இப்பொழுது அருணகிரியார் என்ன சொல்கின்றார்:

**தந்தைக்கு முன்னம் தனிஞான வாளொன்று சாதித்தருள்**
**கந்தச் சுவாமி எனைத்தேற் றியபின்னர் காலன்வெம்பி**
**வந்திப் பொழுதுஎன்னை என்செய்ய லாம்சக்தி வாளொன்றினால்**
**சிந்தத் துணிப்பன் தணிப்பருங் கோபத்ரி சூலத்தையே**

இரண்டும் ஒருவரே பாடியது. அங்கே அஞ்சு கின்றார். இங்கே எமனை அஞ்ச வைக்கின்றார். ஓட்டு வாங்குகிறவன் ஓட்டு வாங்கும் வரைக்கும் தொங் குவான். ஓட்டு வாங்கிவிட்டால் நாம் அவனிடம் தொங்க வேண்டும்.

சிலபேர் சரணம் சரணம் என்பார்கள். தலைவர் அன்னவர்க்கே சரண் நாங்களே என்பார்கள். பிறகு நம்மைச் சரணம் போட வைப்பார்கள். இப்போது அருணகிரியார் பாடலிலே இந்த வித்தியாசம் தெரிகிறது. இதே மாதிரி இராமலிங்க சுவாமிகளின்

பாடலும் இரு வகைத்தாய் இருக்கும். ஒவ்வொன் றாகச் சொல்வதற்கு நேரமில்லை. ஆனால் தாயு மானார் பாடல், ஒரு படித்தாய் இருக்கும். முழுவதும் படித்துத் திரண்ட கருத்தாக உங்களுக்குத் தருகிறேன்.

அதீத நிலையிலிருந்து பாடற பாட்டு. எல்லாரும் வணங்கத்தகுந்த பரம ஞானி அவர்.

**விரும்பும் சரியைமுதல் மெய்ஞ்ஞான நான்கும்**
**அரும்புமலர் காய்கனிபோல் அன்றோ பராபரமே**

அரும்பு - சரியை, மலர் - கிரியை, காய் - யோகம், கனி - ஞானம் என்று உருவகித்துப் பாடுகிறார். அதுமட்டுமல்ல. துட்டு செலவில்லாமல் வழிபாடு செய்யச் சொல்கிறார்.

**நெஞ்சகமே கோயில் நினைவே சுகந்தம்அன்பே**
**மஞ்சனநீர் ஆட வாராய் பராபரமே!**

அவர் காலத்திலே ஒரு பிரச்சினை எழுந்தது. இல்லறம் பெரிதா? துறவறம் பெரிதா? பெரிய பிரச் சனை அது. இப்பவும் சில சமயத்திலே தோணும். பொய்யாமை உயர்ந்ததா? அகிம்சை உயர்ந்ததா? இதைத் திருவள்ளுவர், அகிம்சைதான் உயர்ந்தது. அதற்கு அடுத்ததுதான் பொய்யாமை என்று பின்வரும் குறள்வழி கூறுகின்றார்.

**ஒன்றாக நல்லது கொல்லாமை மற்றதன்**
**பின்சாரப் பொய்யாமை நன்று.**

இப்ப இல்லறம் பெரிதா? துறவறம் பெரிதான்னு பிரச்சனை வந்தது? படிச்சவங்களுக்குள்ளே. இல்லறந் தான் பெரிது என்று திருவள்ளுவர் சொல்றார்.

'அறனெனப் பட்டதே இல்வாழ்க்கை'

என்று.

பட்டினத்தார் சொல்றார்:

"அறந்தான் இயற்றும் அவனினும் கோடிஅதிகம் இல்லம்துறந்தான்"

என்று.

திருவள்ளுவரும் பெரியவர். பட்டினத்தாரும் பெரியவர். நாமெல்லாம் சின்னவங்க. நமக்கு என்ன தெரியும்? அம்மா, அப்பா சண்டை போட்டா புள்ள போய் நடுவிலே நிற்க முடியுமா? அம்மா, அப்பா இரண்டு பேரும் தெய்வங்கள். நாம் எப்படி சமாதானம் பண்ண முடியும்? திருவள்ளுவரும் மிகப் பெரியவர் பட்டினத்தாரும் பெரியவர். திருவள்ளுவர் சொன்னார் இல்லறம் பெரிதுன்னு. பட்டினத்தார் சொன்னார் துறவறம் பெரிதுன்னு.

இவ்வாறு சிலபேர் வாதிட்டுக் கொண்டனர்.

அங்கே வந்தார் தாயுமானார்.

"உங்களுக்குள்ளே என்ன பிரச்சனை."

"ஒண்ணுமில்லே குருநாதா! இல்லறந்தான் பெரிதுன்னு திருவள்ளுவர் சொல்றார். துறவறம் பெரிதுன்னு பட்டினத்தார் சொல்றார்."

"இரண்டும் பெரிதுதான்."

"இரண்டும் பெரிதா? அதெப்படி?" சிஷ்யர்கள் கேட்கின்றனர்.

தாயுமானார் கூறுகின்றார். "இந்தப் பம்பரம் ஆடறதை பார்த்திருக்கீங்களா?"

"ஆமா. நானே ஆடியிருக்கிறேனே."

"பம்பரம் எப்படி சுத்துது. இந்தக் கயிறை வச்சித்தானே பம்பரம் ஆடுது."

"ஆமாம்!" என்றனர் சிஷ்யர்கள்.

சிலபேர் குறிப்பு வச்சி பேசுவாங்க. இப்ப நான் குறிப்பில்லாமெ பேசறது உங்களுக்குத் தெரியும். ஏன்? நீண்டகாலம் பேசிப் பேசிப் பழக்கத்தினாலே, நெடுங்கால அனுபவம். குறிப்பில்லாமலே பேசுகிறேன். விளங்குதா? அதுபோல, இந்தப் பம்பரம், சாட்டை வெச்சி ஆடுது. ஆனா, மிகத் தேர்ச்சி பெற்றவனுக்கு சாட்டையில்லாமலே பம்பரத்தை ஆட்டுவான். நான் சுதிப்பெட்டி இல்லாமலே, மிருதங்கம் இல்லாமலே கதை பண்ணுவேன்.

சில பேர்க்கு இந்த உருவம் இல்லாமலே மனம் ஒடுங்கிப் போகும். இந்தப் பம்பரம் ஆடுதே! வேகமா ஆடுறபோது பம்பரம் தூங்குதுன்னுவான். அந்த வழியா டபுள் எம்.ஏ., படிச்ச ஒரு அறிஞர் வந்தார். பம்பரம் ஆடுது. ஓஹோ! பம்பரம் ஆடுவது

நேச்சர். இயற்கையா ஆடுது என்று எண்ணிக் கொண்டிருக்கிறார்.

அங்கே ஒரு அறிஞர். ஐஏஎஸ் கிருஷ்ணன் வந்தார். “என்ன சொல்றீங்க” என்று அவரை இவர் கேட்கிறார்.

“நான் டபுள் எம்.ஏ. பம்பரம் நேச்சரா ஆடுது.”

ஆட்டின பையன் உள்ளே போயிருக்கான் தண்ணி குடிக்க. ஆட்டுவாரின்றி பம்பரம் ஆடுமா? ஓட்டுவாரின்றி கார் ஓடுமா? நெய்வாரின்றி வேட்டி உண்டா? மண்டபத்தைப் பார்த்தவுடனே மண்டபத் தைக் கட்டினவன் ஒருத்தன் உண்டு என்று தெரி கிறதல்லவா! கட்டிய கொத்தனார் அங்கேயா இருப் பார்? பார்த்தது மண்டபம், கட்டிய கொத்தனார் ஒருவர் உண்டு என்று எண்ணுவது போல, கோயிலைக் கண்டவுடனே, கோயில் கட்டிய மன்னர் பெருமான் ஒருவர் உண்டு என்று எண்ணுவதுபோல, இந்த உலகத்தைப் பார்க்கிறபோதே இந்த உலகத்தை இயற்றியவன் ஒருவன் இருக்கின்றான் என்பது தெளிவாகிறதல்லவா?

மலை மேலே புகை வருமானால் நெருப்பிருக் கிற தென்று அர்த்தம். பாலாறு மேற்கிலிருந்து கிழக்கு நோக்கி ஓடும். நேத்து மாலையிலே போனா உருத் தருணி தண்ணியில்லே. மறுநாள் காலையிலே போனா, நொப்பும் நுரையும் வண்டலுமா தண்ணி

ஓடுது. ஆனா அந்த ஊரிலே மழையில்லை. அப்ப கண்ட வெள்ளத்தைக் கொண்டு, காணாத மழை உண்டு என்று நிச்சயிப்பான் போல, இந்த உலகத்தைக் கண்டவுடனே இந்த உலகத்தை இயற்றிய ஒருவன் இருக்கின்றான். தாயுமானார் பாடுகின்றார்:

**சாட்டைஇல் பம்பர ஜாலம் போல் எலாம்**
**ஆட்டுவான் இறைஎன அறிந்து நெஞ்சமே**
**தேட்டம்ஒன்று அற அருள் செயலில் நிற்றியேல்**
**வீட்டறம் துறவறம் இரண்டும் மேன்மையே!**

நல்ல தமிழ். சாட்டையில் பம்பர சாலம்போல் இறை. இறைவன். ஆட்டுவான் உலகெலாம் அறிந்து. அவன் ஆட்டுகிறான். நாம் ஆடுகிறோம், அவன் என்னைப் பேச வைக்கிறான். நான் பேசுகிறேன். அவன் கேட்க வைக்கிறான். நீங்கள் கேட்கிறீங்க. நடப்ப தெல்லாம் ஈசன் செயல். நம் செயலால் ஒன்றுமில்லை. தன் மகனுக்கு முடிசூட்ட வேண்டுமென்று ஒரு சக்ரவர்த்தி போட்ட திட்டமே நிறைவேறவில்லையே! நாமெல்லாம் எந்த மூலைக்கு? எல்லாம் அவன் செயல். நம் கையில் எதுவுமில்லை. இப்ப அந்தப் பாட்டைச் சொல்லுங்க.

**சாட்டையில் பம்பர ஜாலம் போல் எலாம்**
**ஆட்டுவான் இறைஎன அறிந்து நெஞ்சமே**
**தேட்டம் ஒன்று அறஅருள்**

எல்லாம் திருவருளாலே நிகழ்கிறது என்ற அனுபவ ஞானம் பெற்றால் அவன் இல்லறத்தானா இருந்தால் என்ன? துறவறத்தானா இருந்தால் என்ன? ஒரு குறிப்பு சொல்கிறேன். அண்மையில் வாழ்ந்த ஞானிகளில் ஸ்ரீதர் ஐயர்வாள் இல்லறத்திலும், சதாசிவப் பிரமேந்திராள் துறவறத்திலும் இருந்து வந்தவர்கள்.

தாயுமான சுவாமிகள் மலர் எடுக்கப் போனார். முல்லை, இருவாட்சி, பாரிஜாதம்.

வெறும் குடலையை தூக்கிக் கொண்டு திரும்பி வந்துவிட்டார். மலர் எடுக்கவில்லை. இருந்த சீடர்கள் கேட்டார்கள்.

"சுவாமீ! மலர் எடுக்கப் போனீர்களே; மலரே கொண்டு வரவில்லையே" என்றார்கள்.

"மலரே இல்லையே. மலரே என் கண்ணுக்குத் தெரியவில்லையே" என்றார்.

"அதோ இருக்கிறதே" என்றார்கள்.

"உங்கள் கண்ணுக்கு மலராகத் தோன்றுகிறது. என் கண்ணுக்குச் சிவமாகத் தோன்றுகிறது? சிவத்தைக் கிள்ளி சிவத்தின்மேல் போடலாமா?" என்றார்.

"பார்க்கின்ற மலரூடு நீயே இருத்திஅப்
பனிமலர் எடுக்கமனமும்
நண்ணேன்."

அந்த அனுபவ ஞானத்தாலே. நமக்கு மல்லிகை யாகத் தோன்றுவது அவருக்குச் சிவமாகத் தோன்று கிறது. உலகத்திலுள்ள எல்லாப் பொருளையும் சிவமாகப் பார்க்கின்றார் தாயுமானார்.

சும்மா கும்பிடுங்களேன், சும்மா கும்பிட மாட்டேன். ஏன்? என் உள்ளும் இருக்கின்றார்; புறமும் இருக்கின்றார். நான் கும்பிட்டால் இருபுற மும் இருக்கின்றாரே.

நான் கும்பிடும்போது அரைக் கும்பிடு ஆதலால்
நான்பூஜை செய்யல் முறையோ

இதைக் கேட்டு நீங்கள் யாராவது பூஜை செய்ப வர்களாக இருந்தால் விட்டு விடக்கூடாது ஏன்? மாடி மேல் ஏறியவர் ஏணியைத் தள்ளுகின்றார். நாம் எல்லாம் பாதி ஏணியில் இருக்கிறோம். அவர் தள்ளினார் என்று நாமும் தள்ளினால் மண்டை உடைந்துவிடும். அவர் அந்த நிலை பெற்றவர். அந்த அருள்நிலை பெற்றவர் சொல்லுகின்றார்.

ப்ண்ணேன் உனக்கான பூஜைஒரு வடிவிலே
பாவித்து இறைஞ்ச ஆங்கே
பார்க்கின்ற மலருடு நீயே இருத்திஅப்
பனிமலர் எடுக்க மனமும்
நண்ணேன் அலாமல்இரு கைதான், குவிக்கஎனில்
நாணும் என் உளம்நிற்றிநீ
நான்கும் பிடும்போது அரைக்கும் பிடுஆதலால்
நான்பூசை செய்யல்முறையோ!"

இதெல்லாம் அந்த அனுபவ ஞானி சொல்கின்ற வார்த்தைகள்.

ஆகவே, அந்த அதீத நிலையிலே சீவனும் சிவனும் ஒன்றாகி விடும். அப்போது உண்டாகிற இன்பத்துக்கு எல்லை கிடையாது. அந்த அனுபவ மான ஞானத்திலே திளைத்துக் கொண்டிருந்தார்கள். அதைச் சொல்வதற்கு மொழியும் கிடையாது; அதைச் சொல்ல வாயும் கிடையாது; அப்படியே இன்பத்தில் நிலைத்து நிற்பார்கள். அவர்கள் முகத்திலே அருள்ஒளி வீசும். அந்த முகமே சொல்லும் அவர்கள் பரமஞானிகள் என்று. அந்தச் சரீரமெல்லாம் இன்பமயமாய், உரோமத் துவாரங்கள் எல்லாம் இனிக்கும். இறைவனும் அவர்களும் ஒன்று கலந்து இருப்பார்கள். முன்பு சொன்னேன் அல்லவா! உப்பும் அப்பும் ஒன்றுபடுகிறது என்று. பின்னர் பாடுகின்றார்:

**காடும் கரையும் மனக்குரங்கு**
**கால்விட்டு ஓட அதன்பிறகே**
**ஓடும் தொழிலால் பயன்உளதோ**
**ஒன்றாய்ப் பலவாய் உயிர்க்குஉயிராய்**
**ஆடும் கருணைப் பரஞ்சோதி**
**அருளைப் பெறுதற்கு அன்புநிலை**
**தேடும் பருவம் இதுகண்டீர்**
**சேர வாரும் சகத்தீரே!**

இந்தத் தருணம் போனால் அப்புறம் நீ ஆடு, மாடாய்ப் பிறந்தால் ஜபம் பண்ண முடியுமா? நீங்கள் ஒரு பெருச்சாளியாய்ப் பிறந்தீர்களானால் பூஜை அறையில் அமர முடியுமா? அடித்துப் போட்டு விடுவார்கள். நீங்கள் ஒரு தேளாய்ப் பிறந்து சொற்பொழிவு கேட்கலாம் என்று வந்தால் நாற்காலியில் இருக்க முடியுமா? உடனே அடித்துப் போட்டு விடுவார்கள். மனிதர்களாகப் பிறந்ததனா லேயே சௌகரியமாய் இருந்து கேட்கமுடிகிறது. ஜபம் பண்ண முடிகிறது. ஆகவே, "தேடும் பருவம் இது கண்டீர். சேர வாரும் சகத்தீரே!" இந்தச் சகத்தீரே என்பது அந்த விரிந்து பரந்த உள்ளம். ஒரு சமூகம், ஒரு மதம், ஓர் இனம், ஒரு கட்சி இல்லை. சேரவாரும் சகத்தீரே - அனைத்து உயிர்களையும் விளித்து அழைக்கின்றார்.

ஒரு சாமியார் காவித்துணி கட்டிக்கொண்டு எல்லார்க்கும் வேத வேதாந்தம் உபதேசம் செய் கிறார். அவர் இருக்கும் ஆசிரமத்தை அழகா வச்சிருக்கிறார். நல்ல பூஞ்செடி, மாஞ்செடி, தென்னஞ்செடி. இதெல்லாம் நல்லா அழகா... அந்தப் பூஞ்செடிகளிலே ஒரு செடியை ஒரு பசு மாடு வந்து மேஞ்சிடுச்சி. இவர் தடியெடுத்து அடிச்சார். அந்த மாடு செத்துப் போச்சி. கோஹத்தி.

"குருநாதா! பசுவைக் கொன்னுட்டீங்களே!" என்று சீடர்கள் கேட்கின்றனர்.

"மடையன்களா! பசுவும் பிரம்மம். நானும் பிரம்மம். நீங்களும் பிரம்மம். தடியும் பிரம்மம். பிரம்மத்தை பிரம்மம் அடிச்சது. பிரம்மம் பிரம் மத்துக்கிட்ட போச்சு. இதெல்லாம் பிரம்மத்தின் செயல். உங்களுக்கு என்ன தெரியும்!" என்று குருநாதர் கூறுகிறார்.

அங்கே ஒரு தேவதூதன் வந்தான்.

"சுவாமிகளே வணக்கம். இந்த ஆசிரமம் யாருடையது?"

"என்னுடையது."

"இங்கே எல்லார்க்கும் பாடம் சொல்றது யார்?"

"நான்!"

"இந்தச் செடிகளை வளர்த்தது யார்?"

"நான்..."

"ஓ! இந்த தேங்காய்ச்செடி, மாங்காய்ச் செடி....!"

"எல்லாம் நான்தான்."

"இத்தனையும் செஞ்சது நீ. பசுவை அடிச்சது மட்டும் பிரம்மமா? தேவதூதன் மறைந்து விட்டான்.

இதெல்லாம் வாய் வேதாந்தம். இராமகிருஷ்ண பரமஹம்சர் இப்படி எழுதினார்.

ஒரு சமயம் நாயக்க மன்னர் இருந்தபோது,

தாயுமானாருக்கு ஒரு பொன்னாடை போர்த்தினார். அவர் இதெல்லாம் வெறுத்தவர். நன்றுடையான் தீர்த்தக்கரை பக்கமா வர்றபோது, ஒரு வயதான ஹரிஜன கிழவி குளிர்ல நடுங்கிக் கொண்டிருந்தாள். ராஜா போர்த்தின பொன்னாடையை அந்தக் கிழவி மேல் போர்த்திவிட்டு போயிட்டார். அரிஜன பெண். கலகம் பண்றவன் போய், "மகாராஜா, நீங்க கொடுத்த பொன்னாடையை ஒரு பிச்சைக்காரிக்குப் போர்த்திட்டாரு"ன்னு கோள் மூட்டினான்.

தாயுமானவரை ராஜா கூப்பிட்டார்.

"சுவாமி அந்தப் பொன்னாடையை என்னா பண்ணீங்க?"

"சுந்தர குந்தளாம்பிகை மட்டுவார்குழலி அம்பாளுக்குப் போர்த்தினேன்."

"அரிஜனப் பொண்ணுக்குப் போர்த்திட்டதா சொல்றாங்களே!"

"அரசே, அவங்க கண்ணுக்கு அரிஜன பெண்ணா தெரியுது. எனக்கு மட்டுவார்குழலியா தெரியுது. பார்க்கிற கண்ணோட தப்பு."

மன்னவன் நமஸ்காரம் செய்தான். அவரை உலகத்தையெல்லாம் சிவமா பார்க்கிற அனுபூதிமான் என்று போற்றினான்.

மூலன் மரபிலே ஒரு மவுனகுரு வந்தார்ன்னு

சொன்னேனல்லவா! தாயுமானார் பக்குவப்பட்ட ஆன்மா அல்லவா! அழலிடைப்பட்ட மெழுகுபோல் உள்ளம் உருகிக் கண்ணீர் பெருகி, குருவேன்னு அவர் கால்மேல் விழுந்தார்.

அவர் தன் அருகிலே அமரச் செய்து, செங் கரத்தைச் சென்னி மேல் வைத்தார். 'அத்த மத்தக சையோகம்!'

அருட்கண்ணால் பார்த்தார். சட்சு தீட்சை.

காதிலே மகா மந்திரம் உபதேசம் பண்ணினார் வாசக தீட்சை.

'நீ பரமஞானியாக விளங்கக்கடவாய்!' என்று தாயுமானாருக்கு உபதேசம் செய்தார்.

அவர் உபதேசம் செய்த இடம் இன்றைக்கும் திருச்சிராப்பள்ளி மலைக்கோட்டையில் இருக்கிறது. ஒரு சந்தனக் கல் வச்சிருப்பாங்க. அதை அசுத்தப் படுத்தக் கூடாது. அந்த மூலன் மரபிலே வந்தவரின் அருளை இவர் பெற்றார்.

அந்தக் குருநாதரை நினைந்து நினைந்து உருகுகின்றார்.

எப்படி பாடுகிறார்...

**ஐந்துவகை ஆகின்ற பூதபே தத்தினால்**
**ஆகின்ற ஆக்கை, நீர்மேல்**
**அமர்கின்ற குமிழிஎன நிற்கின்றது என்னநான்**
**அறியாத காலம்எல்லாம்!**

*ஒரு காலத்திலே நான் அறியாமல் இருந்தேன். அப்ப என்ன பண்ணுவேன். கண்ணாடி எடுத்து, சீப்பை எடுத்து (தலையை வாருவது போல் பாவனை) இப்படி நான் ஒரு காலம் இருந்தேன்.*

**"அறியாத காலம்எல்லாம்**
**புந்திமகிழ் உறஉண்டு உடுத்துஇன்பம் ஆவதே**
**போந்தநெறி என்றுஇருந்தேன்.**
**பூராயம் ஆகநினது அருள்வந்து உணர்த்தஇவை**
**போனவழி தெரியவில்லை!"**

*யாக்கைன்னா கட்டப்பட்டதுன்னு அர்த்தம். சரீரம் என்கிறார்களே கொஞ்சம் கொஞ்சமா சரியுதுன்னு அர்த்தம். 'தொந்தி சரிய'ன்னு ஒரு திருப்புகழ் (திருச்செந்தூர் திருப்புகழ்) தொப்பை சரியுது. தேகம்னு சொல்றாங்க இல்லை. 'உற்ற தேகத்தை உயிர் மறந்தாலும்' வள்ளலார் பாடியிருக்கிறாரே! தேகம்னா தகிக்கப்படுவதுன்னு அர்த்தம். உடம்பை மெய் என்று சொல்லுகிறோமே, இது மெய்யா? பொய்யுடல். இதைத்தான் தாயுமானார் சொன்னார்:*

*'ஐந்து வகை ஆகின்ற பூத பேதத்தினால்' - இந்தச் சரீரம் இருக்கிறதே. பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம் - பஞ்சபூதத்தின் பரிணாமம். பால் தயிராக மாறுவது போல - பஞ்ச பூதங்கள் இந்தச் சரீரமாக இருக்கிறது. இது என்ன வெண்கலம் என்று நினைக்கின்றீர்களா? இல்லை இரும்பா,*

பித்தளையா? சதைக்கட்டி. எப்பவும் கீறினால் ரத்தம் வரும். சர்க்கரை வியாதி வந்தால் ஆறாது. அப்பால் வெட்டி எடுக்க வேண்டும். என்ன பெரிதாக நினைத் திருக்கிறீர்கள்? ஒரு முள் குத்தினால் போச்சே.

**ஐந்துவகை ஆகின்ற பூதபே தத்தினால்**
**ஆகின்ற யாக்கை**

எவ்வளவு உறுதி? நீர்மேல் அமர்கின்ற குமிழி எவ்வளவு உறுதியோ? அவ்வளவு உறுதி இந்த உடம்பு.

"ஹலோ டாக்டர்" என்பார். வருவதற்குள்ளே உயிர் போய்விடுகிறது. தனிப்பெரும் தலைவர் - தனக்கென்று வாழாத ஒருவருக்கே (காமராஜருக்கே) இந்த முடிவு என்றால் நாமெல்லாம் எந்த மூலை?

**.................... நீர்மேல்**
**அமர்கின்ற குமிழிஎன நிற்கின்றது என்னநான்**
**அறியாத காலமெல் லாம்**

(ஆரம்பத்திலேயே ஞானம் வருமா?) இது இவ்வளவுதான். இந்தச் சரீரத்தின் தன்மை இன்ன தென்று நான் அறியாத காலம் ஒன்று உண்டல்லவா? அதுபோது எப்படி இருந்தேன்?

**அறியாத காலம்எல் லாம்**
**புந்திமகிழ் உறஉண்டு, உடுத்துஇன்பம் ஆவதே**
**போந்தநெறி என்றுஇருந் தேன்**

அப்படி அந்தத் திருவருள் உணர்த்தாத காலம். திருவருள் உணர்த்தாதபோது அந்தக் கண்ணாடியில் பார்த்துக் கொள்வேன். நிழலில் பார்த்துக் கொள்வேன். அதன்பின் இரயில்வே ஸ்டேஷனுக்குப் போனால் எடை போட்டுப் பார்த்து எழுதி வைத்துக் கொள்வேன். சட்டை யெல்லாம் ஒழுங்குப்படுத்திக் கொள்வேன். கர்ச்சிப்பைப் பாதி மேலே, பாதி கீழே வைத்துக் கொள்வேன். அதன்பின் இப்படிக் கொஞ்சம் வைத்துக் கொள்வேன்; சட்டைக்கு மேலே. அப்படியெல்லாம் இருந்தேன், ஒரு காலம். தாயுமானார் சொல்கின்றார்.

இப்ப நல்லா உடுக்கணும். பொட்டு வைக்கணும். சாப்பிடணும். பெட்ரூம் அலங்காரம் பண்ணி... அதெல்லாம் ஒரு காலம் இருந்தேன். ஆண்டவனே "இவை போன வழி தெரியவில்லை." அப்படி எந்த நேரத்தில் எமதூதன் வருவானோ என்று எண்ணுகிறபோது ஆண்டவனே எனக்கு உண்ணனும் உடுக்கணும்னா தோணும்?

அறியாத காலமெல் லாம்
புந்திமகிழ் உறவுண்டு உடுத்தின்பம் ஆவதே
போந்தநெறி என்றுஇருந் தேன்
பூராய மாகநின தருள்வந்து உணர்த்த

அந்தப் பக்குவ காலத்தில் ஆசார்யன் வடிவத்தில் இறைவர் வருவார். அவர் எந்த ரூபத்திலும் வருவார். ஒரு விறகுக்காரனாக வருவார். ஒரு மாட்டுக்

காரனாக வருவார். ஒரு சிறுமியாக வருவார். எந்த வடிவத்தில் வருவாரோ யாருக்குத் தெரியும்?

"இவைபோன வழி தெரியவில்லை." அது எங்கே போனது எனத் தெரியவில்லை. என்ன சட்டை போடுகிறேன்? எப்படி வேட்டி கட்டுகிறேன்? சௌளம் பண்ணிக்கொண்டு எத்தனை நாளாச்சு? ஒன்றுமே எனக்குப் புரியவில்லை. முந்தி, நானே இரண்டு வேளையும் பண்ணிக் கொள்வேன். பள...பள... என்றிருப்பேன். இப்போது ஒன்றுமே தெரியவில்லை.

அப்படி ஒருகாலம் இருந்தேன். மனைவியின் படத்தைப் பர்சில் வைத்துக் கொண்டு, எங்காவது வெளியூர் போனால் அதைப் பார்த்து ரசித்துக் கொண்டே போவேன். அது ஒரு காலம். இப்போது பார்க்கும் பெண்களெல்லாம் பராசக்தியாகத் தெரி கின்றார்கள். இங்குள்ள தாய்மார்கள் எல்லாம் ஜகந்மாதாவாகக் காட்சியளிக்கின்றார்கள்.

**எந்தநிலை பேசினும் இணங்கவிலை அல்லால்**
**இறப்பொடு பிறப்பைஉள்ளே**
**எண்ணினால் நெஞ்சது பகீரெனும் துயில்உறாது**
**இருவிழியும்"**

இப்போது கவனியுங்கள். இத்தனைச் சுகமும் சுகமாகத் தோன்றுமா? மெத்தை, கட்டில்... அத்தனையும் உவர்ப்பு அடைவது போலே, இந்த

உலக சுகமெல்லாம் எனக்கு உவர்க்கிறது என்றார் தாயுமானார். இப்பொழுது பாட்டை முழுசா கவனியுங்கள்.

ஐந்துவகை ஆகின்ற பூதபே தத்தினால்
ஆகின்ற யாக்கை நீர்மேல்
அமர்கின்ற குமிழிஎன நிற்கின்றது என்னநான்
அறியாத காலம்எல் லாம்
புந்திமகிழ் உறஉண்டு உடுத்தின்பம் ஆவதே
போந்தநெறி என்றிருந் தேன்
பூராயம் ஆகநினது அருள்வந்து உணர்த்தஇவை
போனவழி தெரியவில்லை.
எந்தநிலை பேசினும் இணங்கவிலை அல்லால்
இறப்பொடு பிறப்பை உள்ளே
எண்ணினால் நெஞ்சது பகீரெனும் துயில்உறாது
இருவிழியும் இரவுபகலாய்ச்
செந்தழலின் மெழுகானது அங்கம் இவை என்கொலோ!
சித்தாந்த முத்தி முதலே
சிரகிரி விளங்கவரு தக்ஷிணா மூர்த்தியே
சின்மயா னந்த குருவே!

எந்தச் சமயத்திலே மரணம் வருமோ, அதற்குள் அவன் சரணத்தை அடையணும். இப்படி தாயுமானப் பெருந்தகை அற்புத அற்புதமாகப் பாடுகின்றார்.

சுவாமிகள் நம்பொருட்டுப் பாடியருளிய சிவ ஞானச் செந்தமிழ்ப் பாடல்கள் நம் அகத்திருளைப் போக்கும். செய்கதிர் போலவும் நம்ம மன மாசை

யெல்லாம் மாற்றும். ஞானத் தண்ணிபோல நமக்கு உதவி புரியும்.

காரிட்ட ஆணவக் கருவறையில் அறிவற்ற
கண்ணிலாக் குழவி யைப்போல்
கட்டுண்டு இருந்த எமை...

காரிட்ட ஆணவக் கருவறை... இது கேவல தசை. ஒரே இருளும் துன்பமுமாக இருக்கும்.

பின்னவர் வருவது பெத்த தசை. அங்கே இன்பம் கொஞ்சம், துன்பம் கொஞ்சம். நன்மை கொஞ்சம், தீமை கொஞ்சமாக இருக்கும்.

அப்புறம் வருவது முத்த தசை. முழுதும் சாந்தமான நிலை.

வானளாவிய மதில் சூழ்ந்த ஒரு அரண் மனைக்குள் போக வேணும்னா, அதற்கு முகப்பு வாயில் எங்கே இருக்குன்னு அறிஞ்சி அந்த வாசல் வழியா செல்வதுதான் அறிவுடைமையாகும்.

இதுபோல் முத்தி வீடு செல்ல ஆசைப்படுவோர் அதற்கு வாயில் எதுன்னு சிந்தித்து உணர வேணும்.

இதுதான் வாயில், இந்த வழியே செல்லுங்கள். சென்று முத்தி வீட்டிலே ஞான சிங்காதனத்திலே அமர்ந்திருக்கும் பரம்பொருளைக் காணலாம். கண்டு பேரின்ப வெள்ளத்தில் முழுகலாம் என்று நமக்கு உபதேசிக்கின்றார் தாயுமானார்.

இரயில் பிரயாணம் செய்வோர்க்கு அந்த இலாகா அதிகாரிகள் வெளியிட்ட கால அட்டவணை இருக்கே. கைடு - அது உதவும். அதுபோல, அனுபூதிமானாகிய தாயுமானாருடைய அருள் திருவாக்குகள் நம்ம பரகதிப் பிரயாணத்துக்கு உதவும். 'நான் அறிவாளி. இந்த அட்டவணையை நம்ப மாட்டேன்!' என்றால் ரயில் பயணம் சுகமா இருக்குமா? சிந்தித்துப் பாருங்க. அதுபோல், அறிவாளிகளுக்கும் அனுபூதிமான்களின் உபதேசங்கள் முக்கியமான துணையாகும்.

முத்திக்கு வாயில் இது என்று அறியாது மயங்கித் தயங்கிய சிலபேர் வெறுமனே வறண்ட பத்திநெறியில் நின்றார்கள். சிலர் நவகண்ட பூமியைச் சுற்றி வந்தாங்க. சிலர் கடல்லே முழுகி எழுந்தாங்க. இன்னும் சிலர் நதிகளில் நீராடினாங்க. சிலபேர் பசி தாகங்களைத் தாங்கிக் கொண்டு நெருப்புக்கு மத்தியிலே நின்னுகிட்டு இருந்தாங்க. சிலர் காய்ஞ்சி போன உதிர்ந்து போன சருகுகளை மட்டும் தின்னுக்கினு வந்தாங்க. சிலர் வாய் பேசாம மௌனமா இருந்தாங்க. சிலர் மலைக் குகைகளிலே வசிச்சாங்க.

சிலர் பத்து நாடிகளையும் தூய்மை செய்து, மூலக் கனலை யோக நெறியால் எழச் செய்து மதி மண்டலத்தில் சேர்ந்து அங்கே வழிந்து வரும் அமுதை உண்டார்கள்.

இந்த அற்ப உடல் கற்ப காலம் வரை நிற்கும் படி எட்டு வகையான சித்திகளும் செய்தார்கள். இத்தனை உபாயங்களாலும் முத்தி பெற்றார் களில்லை.

இவை யாவும் முத்திக்கு வாசல்கள் ஆக மாட்டா. அம்மம்மா! எத்தனை துன்பம் எத்தனை பெரிய சித்திகள். இத்தனை செய்தும் உபயோகம் இல்லையா? ஆ... ஆ... வேறு எதுதான் முத்திக்கு வாசல்?

தாயுமானாரிடம் "குருநாதா முத்திக்கு வாசல் எது? எங்கள் அருள் தாகம் தீர உபதேசியுங்கள்" என்று சீடர்கள் எல்லாம் விரும்பிக் கேட்டாங்க.

தாயுமானார் உபதேசிக்கின்றார்.

ஞானம் ஒன்றுதான் முத்திக்கு வாசல். இதனை ஐயந் திரிபின்றி தெளிந்து தேர்ந்து உணருங்கள். இந்த ஞானம் என்பது பல கலைகளைக் கற்பதனால் வரக்கூடிய கலைஞானமில்லே. கலை ஞானத்துக்கு அபர ஞானம்னு பேரு. அதுவும் முத்திக்கு வாசலில்லே...!

திருவருளால் கைகூடும் அனுபவ ஞானமாகிய பரஞானம் ஒன்றே முத்திக்கு வாசல்.

இந்த ஞானங்களைப் பற்றி தெய்வப் புலவர் சேக்கிழார் பெருமான் கூறியருளியிருக்கின்றார்.

**'உவமையிலாக் கலைஞானம் உணர்வரிய மெய்ஞ்ஞானம்'**

இந்த இரு ஞானங்களும் கைவரப் பெற்றவர் தாயுமானப் பெருந்தகையார். இவர் கூறும் அரிய அருள்வாக்கு:

பத்தி நெறி நிலைநின்றும் நவகண்ட பூமிப்
பரப்பை வலமாக வந்தும்
பரவையிடை மூழ்கியும் நதிகளிடை மூழ்கியும்
பசிதாகம் இன்றி எழுநா
மத்தியிடை நின்றும்உதிர் சருகுபுனல் வாயுவினை
வன்பசி தனக்குஅடைத்து
மௌனத்து இருந்தும்உயர் மலைமுழை தனில்புக்கும்
மன்னுதச நாடி முற்றும்
சுத்திசெய் தும்மூல ப்ராணனோடு அங்கியைச்
சோமவட் டத்துஅடைத்தும்
சொல்லரிய அமுதுண்டும் அற்பவுடல் கற்பங்கள்
தோறும்நிலை நிற்கவீறு
சித்திசெய் தும் ஞானம் அலதுகதி கூடுமோ
சித்தாந்த முத்தி முதலே
சிரகிரி விளங்கவரு தக்ஷிணா மூர்த்தியே
சின்மயா னந்த குருவே.

சில நாளில், தாயுமானார் அப்பா தவறி விட்டார். இப்பவும் அரசாங்கத்திலே அப்பா காலமாகி விட்டால் அந்த வேலையைப் புள்ளைக்குத் தருவாங்க; அந்தக் குடும்பத்தை ஆதரிக்கணும்னு.

நான் சொல்லி வெகு பேருக்கு வேலை கொடுத்தாங்க.

அதுமாதிரி அப்பா வேலை தாயுமானவருக்கு கிடைச்சிப் போச்சி. அரசாங்கத்திலே காரியஸ்தர் வேலை. தன் கடமையை செய்யறார். விஜயரங்க சொக்கநாத நாயக்க மன்னர் இறந்துட்டார். மன்னவன் மனைவி ராணி மீனாக்ஷி நாட்டின் ஆட்சிப் பொறுப்பினை ஏத்துக்கிறா. இளம்பெண். தேன்மொழி, மான்விழி, அன்னநடை, மின்னலிடை. ஒருநாள் ஜன்னல் வழியா பார்க்கிறா. சுவாமி உட்கார்ந்து கணக்கு எழுதிக்கினு இருக்கார். அவர் சிவராஜ யோகி. அந்த முகத்திலே தேஜஸ்.

தாயுமானாரிடம் உள்ளத்தைப் பறிகொடுக்கிறார் அரசி. பொதுவா, பெண்ணைக் கண்டு ஆண் உருகுதல் இயற்கை. ஆனால் ஆணைக் கண்டு பெண் உருகுதல் அரிது. இங்கே அரசி உருகுகிறாள்.

"தோழி, அவர் எந்த நாட்டு அரசகுமாரர்?"

"அரச குமாரர் இல்ல அம்மா! நம்ம காரியஸ்தர் மகன் தாயுமானவர். நம்ம அரசாங்கத்திலே வேலை பார்க்கிறார்."

"உள்ளே வரச் சொல்."

தாயுமானார் வருகிறார், மகாராணி. அவரை நோக்கி, "சுவாமி! நீங்க இதய ராஜா, நான் இதய ராணி இன்னையிலிருந்து நான் உங்களின் அடிமை. நாம் இரண்டு பேரும் இங்கேதான் இருக்கணும்!" என்கிறா.

"ஒரு சின்ன வேலை. பார்த்துட்டு வந்துடறேன். அப்புறம் இங்கேயே இருக்கிறேன்."

"சரி!"

வெளியே போனார். வலையிலே இருந்து தப்பிய மான் போலே பொழுது விடியறதுக்குள்ளே புதுக்கோட்டையைத் தாண்டிட்டார். இது தாயுமானவர் வரலாற்றில் ஒரு திருப்பம்.

எவ்வளவு பெரிய ஞானி. இந்த மாயையில் சிக்காமல் ஆண்டவனே என்னைக் காப்பாத்தினையே. என் செயலா? எல்லாம் உன் செயல்!" என்னமா பாடறார்.

**திண்ணியநெஞ் சப்பறவை சிக்கக் குழற்காட்டில்**
**கண்ணிவைப்போர் மாயம் கடக்குநாள் எந்நாளோ!**

**தெட்டிலே வலியமட மாதர்வாய் வெட்டிலே**
**சிற்றிடையிலே நடையிலே**

கருத்து உயர்வு; சொல்லும் உயர்வு. அந்த நடையும் அழகு.

**சேலொத்த விழியிலே பாலொத்த மொழியிலே**
**சிறுபிறை நுதல்கீற்றிலே**
**பொட்டிலே அவர்கட்டு பட்டிலே புனைகந்த**
**பொடியிலே அடியிலே மேல்**
**பூரித்த முலையிலே நிற்கின்ற நிலையிலே**
**புந்திதனை நுழைய விட்டு**

நெட்டிலே அலையாமல் அறிவிலே பொறையிலே
நின்னடியர் கூட்டத்திலே
நிலைபெற்ற அன்பிலே மலைவுஅற்ற மெய்ஞ்ஞான
நேயத்திலே உன்இருதாள்
மட்டிலே மனதுசெல நினதுஅருளும் அருள்வையோ
வளம்மருவு தேவைஅரசே
வரைராஜனுக்கு இருகண் மணியாய் உதித்தமலை
வளர்காதலிப்பெண் உமையே

*அந்தத் தமிழ் குற்றால அருவி மாதிரி கொட்டுது. நிரம்ப உயர்ந்தது அவரது பாடல்.*

*அருணகிரியாரைப் பற்றிப் பாட வருகிறார். மற்றவர்களெல்லாம் இறைவனைப் பாடி அருள் பெற்றார்கள். அருணகிரியார் அப்படியல்ல.*

கந்தர்அனு பூதிபெற்றுக் கந்தர்அனு பூதிசொன்ன
எந்தை அருள்நாடி இருக்குநாள் எந்நாளோ?

*அருணகிரியாரின் பேரைச் சொல்ல அஞ்சு கிறார். அதனால் எந்தை என் தந்தை என்கிறார். அருணகிரியார் பேரில் அத்துணை பக்தி.*

சும்மா இரு சொல்லற என்றலுமே
அம்மா பொருளொன்றும் அறிந்திலனே

*என்ற அனுபூதிப் பாடலை*

சும்மா இருக்கச் சுகம்சுகம் என்று சுருதிஎல்லாம்
அம்மா நிரந்தரம் சொல்லவும் கேட்டும் அறிவுஇன்றியே
பெம்மான் மவுனி மொழியையும் தப்பிஎன் பேதைமையால்
வெம்மாயக் காட்டில் அலைந்தேன் அந்தோஎன் விதிவசமே!

தான் அடைந்த சிவானுபவத்தைச் சொல்ல முடியாது திணறுகிறார்.

முருகப் பெருமான் சிவனுக்கு உபதேசம் பண்றார்.

அரவு புனைதரு புனிதரும் வழிபட
மழலை மொழிகொடு தெளிதர வொளிதிகழ்
அறிவை யறிவது பொருளென அருளிய பெருமாளே!

இந்த இடத்தைத் தாயுமானார் பிடித்துக் கொள்கிறார்.

மகா வித்வான்கள் பாடறபோது எல்லா இடத்திலும் கரகோஷம் கொடுக்க மாட்டாங்க. அந்த முக்கியமான இடம் வர்றபோது அவரையும் அறியாம கை தட்டுவாங்க. அதுபோல, தாயு மானார், அருணகிரியார் பாட்டுக்கெல்லாம் மெச்சல.

அரவு புனைதரு புநிதரும் வழிபட
மழலை மொழிகொடு தெளிதர வொளிதிகழ்
அறிவை யறிவது பொருளென அருளிய பெருமாளே.

அறிவை அறிவது பொருளென அருளிய என்ற வாக்கு தாயுமானாருக்கு உள்ளம் உருக்குது. கருவி கரணங்கள் எல்லாம் அடங்கப் பாடுகிறார்.

அறிவை அறிவதுவே ஆகும் பொருள்என்று
உறுதிசொன்ன உண்மையினை ஒருநாள் எந்நாளோ!

அருணகிரியாரிடத்திலே அத்தனை ஈடுபாடு

தாயுமானாருக்கு. அருணகிரிநாதருக்கு ஆறுமுகப் பெருமான் சொன்னதைத் தவிர வேறெதையும் மதிக்க மாட்டாராம் சுவாமிகளின் சீடர் அருளையர்,

**அருண கிரியார்க்கு ஆறு முகன்சொலும்**
**பொருள்நலம் அல்லது பொருள்என மதியான்**

என்று பாடுகிறார்.

தாயுமானாரின் பாடல்கள் எல்லாம் விலை மதிக்க முடியாதவை. அவர் சொல்றார்:

**மைகாட்டும் மாயை மயக்கம்அற நீகுருவாய்க்**
**கைகாட்ட வும்கனவு கண்டேன் பராபரமே!**

**மால்வைத்த சிந்தை மயக்குஅறஎன் சென்னிமிசைக்**
**கால்வைக்க வும்கனவு கண்டேன் பராபரமே!**

**மண்ணீர்மை யாலே மயங்காதுஉன் கையால்என்**
**கண்ணீர் துடைக்கவும்நான் கண்டேன் பராபரமே!**

**எவ்வுயிரும் என்னுயிர்போல் எண்ணி இரங்கவும்நின்**
**தெய்வ அருட்கருணை செய்யாய் பராபரமே!**

பராபரக்கண்ணி ஒண்ணு போதும், இந்த உலகத்தை வாழவைக்க.

**ஐயா அருணகிரி அப்பா உனைப்போல**
**மெய்யாக ஓர்சொல் விளம்பினர்யார் - வையகத்தோர்**
**சாற்றரிதுஎன்று ஏசற்றார் தன்னனையாய் முக்கண்எந்தை**
**நாற்றிசைக்கும் கைகாட்டி னான்.**

சிவபெருமானே கைகாட்டிச் சொன்னார்: இது மாயா மலம். இது கன்ம மலம். இது ஆணவ மலம் என்று. இந்த மூன்று மலத்தை விட்டுச் சீவன் பிரிஞ்சி சிவத்தை அடையணும். அதுதான் சின்முத்திரை அடையாளம்.

அப்படி தாயுமான சுவாமிகள் நிஷ்டையில் இருக்கிறார். எங்கே? மயானத்திலே. ஒரு நூறு வருஷத்துக்கு முந்தி நெட்டூர்லே அபரானந்த சுவாமிகள் ஆத்தங்கரையில் ஜெபம் பண்ணிக்கினு இருந்தார். அப்படியே தன்னை மறந்துட்டார். தலையிலே காக்காய் கூடு கட்டியிருந்ததாம்.

அதுபோலே தாயுமான சுவாமிகள் தியானத்தில் இருந்தார். மாடு மேய்க்கிற பையன்களுக்கு என்ன தெரியும்? அப்போது ஆட்சியிலே இருந்த ராஜா கிட்ட போய், 'மயானத்திலே ஒரு பிணம் இருக்குது!' என்றனர். ராஜா வந்து பார்க்க வேணாமா?

... "தகனம் பண்றா"ன்னு சொல்லிட்டார்.

சுவாமியை அங்கிருக்கிற ஆளுங்க போய் கட்டை முட்டை வச்சி தீ வச்சிட்டாங்க.

சுவாமி நிஷ்டையிலே இருக்கிறார். இந்தப் பெருவிரல் சூடு பிடிச்சது. உடனே சிதையைத் தள்ளி எழுந்தார். அப்போ ஆகாசத்திலே வித்தக சித்தர் கணம் போகுது. அப்போதுதான் வித்தக சித்தர்கணம்பாடி சுவாமியினுடைய அருள்மேனி மேலே போகுது.

*வித்தக சித்தர்கணத்தைப் படிச்சிப் பாருங்க...*

**திக்கொடு திகந்தமும் மனவேகம் என்னவே**
**சென்றுஓடி ஆடிவருவீர்**
**செம்பொன்மக மேருவொடு குணமேரு என்னவே**
**திகழ்துருவம் அளவுஅளாவி**
**உக்ரமிகு சக்ரதரன் என்னநிற் பீர் கையில்**
**உழுந்துஅமிழும் ஆசமனமா**
**ஓர்ஏழு கடலையும் பருகவல் லீர் இந்த்ரன்**
**உலகும்அயி ராவதமுமே**
**கைக்குளளிய பந்தாய் எடுத்துவிளை யாடுவீர்**
**ககனவட் டத்தைஎல்லாம்**
**கடுகிடை இருத்தியே அஷ்டகுல வெற்பையும்**
**காட்டுவீர் மேலும்மேலும்**
**மிக்கசித் திகள்எலாம் வல்லநீர் அடிமைமுன்**
**விளங்கவரு சித்திஇலிரோ**
**வேதாந்த சித்தாந்த சமரசநன் நிலைபெற்ற**
**வித்தகச் சித்தர் கணமே.**

இது மாதிரி பாட்டு ஒவ்வொண்ணும் உலகத்தை விலை மதிக்கும். தாயுமானார் கவி அவ்வளவும் வேதாந்த சித்தாந்த சாரமாய் விளங்குவது. ஈடு எடுப்பு இல்லாதது.

தாயுமானார் அனுபூதிமானா இருந்து பதினேழாம் நூற்றாண்டிலே சிவானுபவத்தை பெற்றுச் சிவமாம் பெற்றியைப் பெற்றார்.

தாயுமான சுவாமிகள் 1452 பாடல்களைப் பாடியருளினார்.

அவருடைய பாடலை நாம் படிக்கணும். பக்தியோடு படிக்கணும்; மனனம் செய்யணும், பூஜையிலே சொல்லணும்; அவர் பெற்ற அனுபவத்தை நாமும் பெறுவதற்கு விரும்ப வேண்டும் என்பதை சிறியேன் வணக்கத்தோடு தெரிவித்துக் கொண்டு சமரச ஞான சித்தரா வேதாந்த சித்தாந்த சித்தரா விளங்கிய அந்தப் பெரிய ஞானியின் வரலாற்றில் சிறிது உளறினேன். அந்தத் திருவருளுக்கு வணக்கம் கூறி இந்த அளவிலே பூர்த்தி பண்ணுகிறேன்.

மூர்த்திஎல்லாம் வாழிஎங்கள் மோனகுரு வாழிஅருள்
வார்த்தைஎன்றும் வாழிஅன்பர் வாழி பராபரமே.



*சுவாமிகளின் சீடர் அருளையர் என்பவர் தாயு மானவர் பெருமையை 'அருளையர் அருள்வாக்கிய அகவல்' என்று 232 வரிகளமைந்த பாடலில் விவரித் திருக்கின்றார்.*

## பிற்சேர்க்கை

தாயுமானார் சுபகிருது வருடம் தை மாதம் விசாகம் நட்சத்திரத்தில் மகா சமாதியடைந்தார். இராமநாத புரத்துக்கு அருகிலுள்ள இலட்சுமிபுரம் என்னும் ஊரில் அவரது திருமேனி சமாதி வைத்துத் திருக்கோயில் எழுப்பப்பட்டிருக்கிறது.

சுவாமிகள் கி.பி. 1707ல் அவதரித்திருக்கலாமென்றும் அவர் துறவியாகும்போது முப்பது வயதிருக்கலா மென்றும் கி.பி. 1736ஆம் ஆண்டிற்குப் பிறகு வரும் சுபகிருது வருடம் 1783-ல் அமைகிறது. எனவே ஸ்ரீ தாயுமான சுவாமிகளின் காலம் 18-ம் நூற்றாண் டாகும் என்று சில ஆய்வாளர்கள் கருதுகின்றனர்.

யாழ்ப்பாணப் புலவர் சுன்னாகம் குமரசாமிப் பிள்ளையவர்கள் தாயுமானவரின் காலம் 1608 - 1664 என்றும் 56 ஆண்டுகள் சுவாமிகள் ஜீவித்திருந்தார் என்றும், எனவே சுவாமிகளின் காலம் 17-ம் நூற்றாண்டு என்றும் கருதுகின்றார்.

தாயுமான சுவாமிகள் மகா சமாதியடைந்த தினத்தைப் பின்வரும் பாடலால் அறியலாம்.

**துகளறு சாலி வருடமா யிரத்தை**
**நூற்றொடெண் பத்தொன்று தொடரும்**
**மிகுசுய கிருதாம் வருடந்தை மாதம்**
**வெண்மதி வாரநாள் விசாக**

மகிமைசேர் பூரணத் திதியினில் அருத்த
　　மண்டல சமையத்திற் கங்கை
திகழ்கரை யதனில் தாயுமா னவனார்
　　சிவத்தினில் கலந்தநற் றினமே.

*- கோடிக்கரை ஞானிகள்*

## திருப்பாடற் சிறப்பு

திருமூலன் மரபினெழும் திருமவுனி திருவருளைத்
　　திரட்டி வாரி
அருளூறும் ஆனந்த அனுபூதிச் சாரமெலாம்
　　அருந்தி நாளும்
மருளோடும் இருளோட மறைக்காட்டின் எழுந்தாயு
　　மானோன் ஞானப்
பொருளாரும் சித்தாந்தத் தமிழ்மழையை உலகுய்யப்
　　பொழிந்தான் மாதோ.

*- யாழ்ப்பாணம் மகாவித்வான்*
*ஸ்ரீமந் - நா.கதிரைவேற் பிள்ளையவர்களால்*
*இயற்றப்பட்ட, தாயுமான சுவாமிகள்*
*சரித்திரச் சுருக்கத்துக்குப் பின்வரும் பாடல்.*

**- பதிப்பாசிரியர்**



